# மணல்மேட்டில் ஓர் அழகிய வீடு

COMMENTARIES ON
J.KRISHNAMURTHI

கோவை ஞானி



விழிகள் பதிப்பகம்
8/எம் 139, 7ஆம் குறுக்குத் தெரு
திருவள்ளுவர் நகர்
திருவான்மியூர் விரிவு, சென்னை 41

**நூல் விவரக் குறிப்பு**

**நூல் பெயர்**

மணல்மேட்டில் ஓர் அழகிய வீடு

**வகை**

ஜே.கிருஷ்ணமூர்த்தி அவர்களின்
சிந்தனைகள் மீதான கருத்துரை

**ஆசிரியர்**

கோவை ஞானி

**பதிப்பு**

விழிகள் பதிப்பகத்தின் முதற் பதிப்பு 2012

**பக்கம்**

72

**வடிவமைப்பும் மெய்ப்புத்திருத்தமும்**

தி.நடராசன், சென்னை –41

**அச்சு**

பிரிண்டெக் இந்தியா
சென்னை – 600 005

**வெளியீடு**

விழிகள் பதிப்பகம்
சென்னை – 600 041
9444 265152

விலை ரூ. 60

*முதல் பதிப்பின் முன்னுரை - 1978*

# புதிய பொருளியல் உறவுகளில் இவனைக் குடியேற்றுகிறோம்

## ஞானி

மதத்திலிருந்து சில உண்மைகளை நாம் மீட்டுக் கொள்ள வேண்டும். சரியான தத்துவப் பார்வைதான் இதைச் செய்யும். மதபீடங்களும் ஆதிக்கச் சக்திகளும் தம் ஆதிக்கத்தை விட்டுக்கொடுக்க மாட்டா. தீவிரமான போராட்டங்களே இதைச் சாதிக்கும். இடையில் மக்களை மதப்பிடிப்பிலிருந்து விடுவிக்க, பக்குவமான முயற்சிகளை நாம் செய்ய வேண்டும். இத்தகைய முயற்சிகளில் ஒன்றுதான், மதத்திற்குள் உள்ள சில உண்மைகளை மீட்டுக்கொள்ளல். மதம் மடத்தனம்தான், அபின்தான் என்ற வாய்வீச்சு இதற்குப் பயன்படாது. ஆன்மா அற்ற உலகின் ஆன்மாவாக, நோய்க் கூறான சமூக நிலைகளில் மருந்தாக, மதம் இருந்திருக்கிறது. ஆதிக்கச் சக்திகளுக்கு எதிரான கலகமாகவும் மதம் செயல் பட்டிருக்கிறது. இந்த ஆன்மாவை, மருந்தை, கலகத்தை உலகியலிலிருந்துதான் மதம் உருவாக்கிக் கொண்டது.

ஆதிக்கச் சக்திகள், மதத்தைத் தமக்குப் பேச்சாளராக, காவலாக கருவியாக மாற்ற முயன்றது உண்மை. அப்போது மதம், விலங்காக, நஞ்சாக மாறியதும் உண்மை. சுரண்டலை ஒழிக்கக் கிளம்பிய மார்க்சியத்தைப் பேசிக்கொண்டே, உடமை வர்க்கக் கட்சியாக, ஏகாதிபத்தியமாக, உருவாகி விடுவதைப் போல – இப்படியும் நடைபெறலாம். இச்சக்திகள் மக்களின் பகைவர்கள். இவர்களுக்குப் பலியானவர்கள் மக்கள். மதத்தைப் பற்றிச் சரியான தத்துவப் பார்வை தருவது மார்க்சியம்தான். குறிப்பிட்ட வரலாற்றுச் சூழல்களில், எத்தகைய சமுதாயப் பிரச்சினைகளிலிருந்து மதம் தோன்றியது? மதத்திற்குள் எதிரொலித்த பிரச்சினைகள் எவை? மதம் முன் வைத்த தீர்வுகள் எவை? வரலாற்றுச் சூழல் மாறும் போது மதம் பெறும் மாற்றங்கள் என்ன? இவற்றையெல்லாம் தெளிவாக விளக்குவது மார்க்சியம்.

வரலாற்றின் எதிரொளியாக மட்டுமே மனிதன் இல்லை. வரலாற்றை உருவாக்குபவனாகவும் மனிதன் இயங்குகிறான். மனிதப் படைப்புகள் இத்தகையவை. இவற்றுள் ஒன்று மதம். வர்க்கப் போராட்டம் மதத்திற்குள்ளும் தொடரும். மதங்கள் மாறுவது, அழிவது முதலிய சிக்கல்களை இந்தப் பார்வையிலிருந்தல்லாமல் விளக்க முடியாது. மதங்களை மார்க்சியம் போல விளக்கக்கூடிய கோட்பாடு வேறு இல்லை. சமயவாதிகள் மதங்களை விளக்குவதில் படுதோல்வி கண்டிருக் கிறார்கள். குன்றக்குடியார், வாரியார், சங்கராச்சாரியார், இவர்கள் இறுதியாக வந்தவர்கள்.

இன்றைய நிலையில் சமுதாயப் பிரச்சினைகளை மதம் தீர்க்காது. ஆனால், சரியான முறையில் மதத்தை அணுகாவிட்டால் பிரச்சினைகளின் தீர்வுக்கு மதம் குறுக்கே வரும். மதத்தையும் மனிதன்தான் படைத்தான், சில தேவைகளோடு, சில தேவைகளுக்காக என்பதில் தொடங்கி, மதம் படைத்த கடவுள் முதலிய கருத் தாக்கங்கள் எப்படி மனிதவியல் சமூகவியல் சார்ந்த சில உண்மைகளை – அவ்வக்கால நிலைகளில், காலநிலைக்கேற்ற வார்ப்புடன் – சொல்லுகிறது என்பதையும் விளக்கி, சமூகவியல் பற்றிய உண்மைகள் தெளிவாகத் தெரியவரும் இக்கால நிலையில் மதம் கண்ட மனிதவியல் பிரச்சினைகளுக்கான தீர்வு எது என்பதையும் சொல்லி, கடைசியில் ஆதிக்கச் சக்திகள் செய்யும் சூழ்ச்சிகளையும் தடைகளையும் விளக்கி – இம்முறையில்தான் பக்குவமாக அணுக வேண்டும்.

மதம் நமக்கு இப்போது பிரச்சினை இல்லை என்று ஒதுங்குவது, இதைச் சரியாக அணுகும் முறையும் அல்ல. மதம் மடமைதான் என்பது, பிரச்சினையைத் திரிப்பதுடன், வேண்டாத பகைவர்களை எதிரே நிறுத்தி விடும். ஆதிக்கச் சக்திகள் இவர்களோடு அணி சேர்ந்து கொள்ளும். மதம் மடத்தனம்தான் என்று பேசுபவர்கள் மக்களை ஆதிக்கச் சக்தியின் அணியில் தள்ளுகிறார்கள். மார்க்சியவாதிகள் இதைச் செய்துவிடக் கூடாது. வரலாற்றுப் பார்வையை விட்டால், மார்க்சியவாதிக்கு ஞானம் இல்லை. மதம் மடமைதான் என்பவர்க்கு இப்பார்வை இல்லை. பகுத்தறிவே போதும். புராணங்கள் இதிகாசங்கள் பொய் என்ற வாதத்தையும் நாம் இம்முறையில்தான் சந்திக்க வேண்டும். சரியான முறையில் அணுகினால் இராமாயாணமும் பாரதமும் மார்க்சியம் பேசும். தவறான முறையில் கணித்தால் இவை ஆளும் வர்க்கத்திற்கான நியாயங்களையே பேசும்.

சடங்குகள் சாத்திரங்கள் பற்றிய நம் ஆய்வுகளும் இம்முறையிலேயே செல்ல வேண்டும். இவற்றுக்குள் மனிதன் மாட்டிக்கொண்டான், வகை தெரியாமல் அடுப்பெரித்தவனைப் போல.

மார்க்சியம் தரும் முதல் ஒளி, பலரைக் குருடாக்கியிருக்கிறது. இவர்கள் யானையைத் தடவிக் கொண்டிருக்கிறார்கள். பொருளா, ஆன்மாவா, எது முதல்? என்ற கேள்வியையே திரும்பத் திரும்பக் கேட்டு மற்றவரை முடமாக்கிக்கொண்டிருக்க வேண்டாம். பொருளிலிருந்து 'ஆன்மா' தோன்றுவதையும், சிலபோது பொருள் வறண்ட நிலையில் ஆன்மா ஒளியோடு விளங்குவதையும், எவ்வளவுதான் விலகிச் சென்றாலும் பொருளின் எல்லையை விட்டு 'ஆன்மா' அறவே விலகிச் செல்ல முடியாததையும், எந்த எல்லையிலும் பொருளியலின் விதிகளே அதனை ஆளுவதையும் நாம் விளங்கிக்கொள்ள வேண்டும்.

தத்துவ வகையிலான கருத்து முதலியலை வறட்டுப் பொருள்முதலியல் தோற்கடித்துவிட வேண்டாம். அப்புறம் இதுவே விக்கிரமாகிப் பலி கேட்கும். தத்துவ வகையிலான கருத்து முதலியல், வளமான பொருள் முதலியலுக்கு வாயில் திறக்கிறது. வறட்டுப் பொருள் முதலியல் வாயிலை அடைத்தே வைக்கிறது.

வளமான தத்துவப் பார்வைதான் மனிதனை சரியாக விளக்குகிறது. மனிதன் யார்? இவன் எப்படி உருவானான்? இவன் இன்று யாராக இருக்கிறான்? யாராக இருக்க வேண்டும்? என்பதற்கு இது விடை தருகிறது. வரலாற்றின் ஆக்கமும் அவலமும் அவனுக்குள் இருப்பதை, இயங்குவதை இப்பார்வை விளக்குகிறது.

வரலாற்றின் வழியே உருவாகி வரும் மனிதனின் விசுவரூபத்தை இவனுக்கு முன் எடுத்து நிறுத்துவது இப்பார்வை.

இவனது அவலங்களை அழிப்பதற்காக இவனது பேராற்றலைத் தூண்டி, தன் வரலாற்றுக் கடமையை அவன் செய்து முடிக்க வைப்பது இப்பார்வை. இத்தகையவன் தான் கீதையின் நாயகன்; இவனே மதங்களில் கடவுள். வரலாற்று வெள்ளத்தில் நீந்தித் திளைக்கும் சித்தார்த்தனும் மகாவீரனும் இவனே.

இவன் பார்வையிலேயே உலகம் படைக்கப்படுகிறது.

எங்கும், எதிலும் இவன் ஆட்சியே செல்லுகிறது. பிரபஞ்சம் இவன் பார்வை பட்டே ஒளி தருகிறது. இவன்தான் கார்க்கியின் உரத்த குரலில், மனிதன். இவன்தான் கார்க்கி உருவாக்கக் கருதிய புதிய கடவுள்.

மனித சமூகத்தின் அளவிறந்த ஆற்றல்களையும், மனித சமூகம் சேகரித்துக்கொண்ட அளவிறந்த பேரொளியையும் இவன் தாங்கி, வானுயர நிமிர்ந்து நிற்பவன். வேதங்கள் உபநிடதங்கள் தொடங்கி எல்லா ஞான நூல்களும் இவனைப் பாடியதில் வியப்பில்லை. இவனுக்கு ஆயிரம் கோயில்கள் எழுப்பியதில் வியப்பில்லை. தேவாரங்களும் திருவாய்மொழி களும் இவன் புகழ் பாடியே புனிதம் பெற்றன. மனித உறவுகளில் இவனைக் கண்டே பாரதி 'கண்ணன் பாட்டு'ப் பாடினான்.

மனிதர்களுக்குள் அகப்படாமல் விண்முகடுகளில் திரிந்த இவனை, தத்துவ ஒளியில், மனிதருக்குள் காண்கிறோம். ஞானவான்களின் கோயில்களில் அல்லாமல் ஏழை உழவர்களின் கரங்களிலும் கலைஞர் நாவிலும் இவனே வாழ்கிறான். எல்லோர்க்காகவும் இவனே சிலுவை சுமந்தான். எல்லோர்க்காகவும் பாடுபடும் இவனே பசித்த வயிற்றில் நனைத்த துணிகளைக் கட்டிக்கொண்டான். இன்று இவனை, உடமைக் கோபுரங்களிலிருந்து வெளிக்கொணர்ந்து, எல்லோர்க்கும் எல்லாமான புதிய பொருளியல் உறவுகளில் குடியேற்றுகிறோம். உடமை வர்க்கக் கொடுங்கோலர்களும் போலிக்குருமார்களும் சங்கராச்சாரிகளும் சாயி பாபாக்களும், இவன் மனிதனாக மலர்வது பற்றி இவனைக் கண்டு அஞ்சி ஒதுங்குகிறார்கள். மீண்டும் இவனைச் சிறையிட முனைகிறார்கள். சிறைகளை இனி இவன் தகர்ப்பான். இவனது பேரரசு இனி மேன்மையான மனித உறவுகளில் நிலை கொள்ளும். இவனை, வரலாற்றுச் சூழலில், மனித உறவுகளில், கண்டு, எடுத்து நிறுத்தி, இவனது வரலாற்றுக் கடமைக்கு இவனைத் தூண்டுவது மார்க்சியமே. மார்க்சியத்தை விட்டால், இனி மனித சமூகத்திற்கு உய்யும் நெறியில்லை. தமிழக கலை இலக்கியவாதிகளும் சிந்தனை யாளர்களும் மத விமர்சகர் களும் இதை அறிந்து கொள்வது நல்லது. இப்படி அறிதலின் போதுதான்

வரலாற்று வெள்ளத்தில் இவர்களும் கலந்து, அதன் வேகத்தை மிகுதிப் படுத்துவார்கள். வேதங்களும் புராண இதிகாசங்களும் கோபுரங்களும் சிற்பங்களும் அப்போது தான் மனிதப்படைப்புகளாக – கலைகளாக – நிற்கும்.

ஜே.கே.வைப் படிக்கும் போதும் மார்க்சியத்தை இப்படித்தான் நாம் பயில வேண்டும். ஜே.கே.வைச் செரிப்பதும் இம்முறையில்தான். ஜே.கே.வை நான் மரியாதையோடு அணுகியிருக்கிறேன். அவரைக் கேவலப்படுத்தி எனக்குப் பெருமை சேர்க்க நான் விரும்பவில்லை. ஜே.கே.விலிருந்து இதைவிடச் சிறந்த தேர்வைச் செய்து கொள்ள முடியும். ஜே.கே. பற்றித் தமிழவன் கூறும் ஒரு விவரம், மீண்டும் ஒரு சுரண்டல் சூழலில்தான், முரண்பாடுகளோடு தான் ஜே.கே. வாழ்கிறார் என்பதையே விளக்குகிறது. ஜே.கே. மத நிறுவனத்திலிருந்து தான் விலகி வந்தது உண்மை. சுரண்டல் சூழலிலிருந்து அவரால் விலக முடியாது அவருக்காகவும் சேர்த்தே சுரண்டல் சூழலை மற்றவர் தகர்க்க வேண்டும். ஜே.கே. ஒரு சமயவாதியல்லர். சமயப்பாங்குடன் கூடிய ஒரு 'சிந்தனையாளர்'. சமயத்தை நிதானமாக அணுகும் முறையிலேயே இவரும் அணுகப்படுவது நல்லது. மதவாதிகளை, சிந்தனையாளர்களை, மார்க்சியவாதிகள் அணுக வேண்டிய முறைக்கு ஜே.கே. பற்றிய இந்த விமர்சனம், ஒரு மாதிரியாகலாம். கலைஞர்கள், இலக்கியவாதிகளை அணுகுவதற்கும் இந்த மாதிரி பயன்படலாம்.

மார்க்சியத்தை ஒவ்வொருவரும் அவரவர் அனுபவங்களின் வழியேதான் செரித்துக்கொள்ளமுடியும். கருத்துகள், குறிப்பிட்ட சமுதாயச் சூழலில், சில அனுபவங்களின் வழியே, சூழல் அனுபவங் களின் அழுத்தத்தோடுதான் உருவாகின்றன. கருத்துகளின் பிடிப்போடு மனிதர் இருப்பதற்கும் கருத்துகளை மனிதர்கள் பிடித்துக்கொள்வதற்கும் இது காரணம். இதனாலேயே கருத்து வேறுபாடுகளும் இறுதியாக வரலாற்றின் வளர்ச்சிக்கு உதவி செய்யும் முறையிலேயே கருத்துகள் செயல்களின் தகவுகள் தீர்மானிக்கப்படுகின்றன. எனது கருத்துகளும் அவ்வாறே தீர்மானிக்கப்படட்டும்.

### இயந்திரம் மனிதர்களை உருவாக்காது

மிக வித்தியாசமான கருத்துகளைத் தெரிவித்திருக்கக் கூடிய வேறு சில நண்பர்களையும் கேட்டிருந்தேன். அவர்கள் எழுதவில்லை. கட்சிக்கு வெளியிலிருந்து மார்க்சியத்தைக் கற்பவர்கள் பெருகி வருகிறார்கள். கட்சிக்குள் கருத்து வேறுபாடுகள் விரிவாக விவாதிக்கப்படாமலும் தீர்க்கப் படாமலும் இருப்பதன் விளைவு இது என்பதைக் கட்சி சார்ந்தவர்களே அறிவார்கள். மார்க்சியத்தின் நோக்கில் தீர்க்கப்படாத பல பிரச்சினைகள் இருப்பது போலவே மார்க்சியத்தின் அடிப்படை பற்றிய சிக்கலான பல பிரச்சினைகளும் உள்ளன. மிக விரிவான படிப்பும் சிந்தனையும் அனுபவமும் விவாதமும் இல்லாமல் இவை தீரப் போவதில்லை. படிப்பறிவும் சிந்தனைப் பயிற்சியும் கூடவே இல்லாத வெற்றனுபவத்தின் விளைவுகள் கொடுமையானவை. அரசியல் நிலைப்பாடுகள்பற்றிய பிரச்னைகளில் எழும் கருத்து வேறுபாடுகளை மக்கள் மத்தியில் விவாதிக்கக் கூடாது என்றாலும் – இந்த முறை கூடச் சரியில்லை என்பதாகச் சீன அனுபவம் பேசுகிறது. கலை இலக்கியம் கலாச்சாரம் மதம் தத்துவம் போன்ற பிரச்சினைகளை விவாதித்துக்கொள்ள முடியும். இத்தகைய விவாதங்கள் மார்க்சியம் நோக்கி மக்களை நகர்த்தும். கட்டுப்பாடுகள் என்ற பெயரில் கட்டி வைத்தல் நடைபெறுகிறது. மார்க்சியம் இறுகிப் போவதற்கு –

இயந்திரத்தனமாவதற்கு – இதுவும் ஒரு காரணம். மக்கள் மீது நம்பிக்கை கொண்டவர்கள் இப்படிச் செய்ய மாட்டார்கள்.

ஜே.கே. பற்றிய கட்டுரை மீது நண்பர்கள் தெரி வித்திருக்கும் கருத்துகள் பற்றிக் கூறுவதானால், ஜே.கே. இந்திய சமயவாத மரபின் எங்கோ ஒரு தொடர்ச்சியாகவும் அறுபட்டும் தெரிகிறார். உபநிடத ஞானம், நிர்வாணம் – இவையாகவும் இல்லாமல், இவை அல்லாததாகவும் இல்லாமலும் பழைய ஞானம்தான் என்று சுருக்கி விடலாமா? **கௌதமன் கூறுகிறபடி,** மார்க்சியவாதிகள் மனவியல் போன்ற துறைகளில் அக்கறை கொள்ள வேண்டும். சமூகத்தின் முற்றான மாற்றம் அனைத்துத் துறைகளையும் தழுவியதாக இருக்க வேண்டும். பொருளதாரத்தில் தான் முதலில், அப்புறம் பிற துறைகளில் என்ற நோக்கின் விளைவைப் பல முறை பார்த்துவிட்டோம்.

**இயந்திரத்தனம் மனிதர்களை உருவாக்காது.** ஜே.கே. முதலியவர்களைப் படித்துக்கொள்வதற்கு இதுவும் ஒரு காரணம். தீவிரமான செயல்பாடுகளின் போது மனம் விரிவடையும், உறுதி பெறும், அழகு பெறும், மிகச் சிறியதிலும் கவனம் கொள்ளும், மனித உறவுகளில் மேன்மை கொள்ளும். லெனின், மாவோவை நாம் இங்கு நினைவு கொள்ள வேண்டும். தீவிரமான செயல் பாடுகளில் ஈடுபடுவதற்காக மனத்தில் இறுகிப் போவதாகக் கூறிக்கொள்வது – இது உண்மையாக இருந்தால் – ஓர் அவலம். மனிதனின் தன் இழப்பு. விளைவு, ஸ்டாலினியம், இதற்காக மார்க்சியம் பெருமைப் பட்டுக்கொள்ள முடியாது. அப்புறம் மார்க்சியம் போய்ச் சேருவதற்குத் திசை இல்லை. இந்த அவலத்தை உண்மையாக ஏற்றுக்கொண்டவர்கள் 'தியாகிகள்'.

ஒரு சந்நியாசியும் கலைஞனும் மார்க்சியவாதியும் – தம் துறையில் தீவிர ஈடுபாடு கொண்டவர்களைத்தான் இங்கு கருத்தில் கொள்கிறோம் – பெறும் ஒரு தீவிர மனநிலையை, இந்தியச் சூழலில் வைத்து நான் இப்படித்தான் புரிந்துகொள்கிறேன். இந்தியாவில் மதம், கலை, இலக்கியம், கலாச்சார மேன்மைகளைப் புரிந்துகொள்ள இந்தப் பார்வை மிகவும் பயன்படும் என்று நம்புகிறேன். இதைப்பற்றி நாம் மேலும் ஆராய்வதற்குத் தேவை இருக்கிறது.

**சிங்கராயர் கருதுவது போல,** சிந்தனை சிந்தித்தல் பற்றி ஜே.கே.விடம் காணும் வேறுபாட்டை நான் முக்கியமாகக் காணவில்லை என்பது உண்மை. ஜே.கே.வை மேலும் சரியாகப் புரிந்துகொள்ள இந்த வேறுபடுத்தல் பயன்படும். எனது முன்னுரை சில இடங்களில் ரொமான்டிக் ஆக இருக்கிறது. தவிர்த்திருக்கலாம். சமயம் பற்றி எனது கருத்துகளுக்குக் காரணமான, என் இளமைக் காலச் சமய அனுபவங்கள் பல. அவை பற்றிப் பிறிதொரு சந்தர்ப்பத்தில் பேசலாம். நாகரிகமாக விவாதித்தலில் இரு ஒரு முயற்சி. இம்முயற்சி தொடரட்டும்.

# புத்தனுக்கும், கிறிஸ்துவுக்கும் வாய்த்த அந்த மன நிலை...

மனிதருக்கும் இயற்கைக்கும், மனிதருக்கும் மனிதருக்கும் உள்ள உறவுகளினூடே மனித சாராம்சம் சேரிக்கப் பட்டிருப்பதை மார்க்சீயம் கூறுகிறது. நமது ஜே.கே.க்கு இதில் மனிதன் – இயற்கை உறவுதான் தத்துவப் பொருள். தமது வற்புறுத்தல் எல்லாம் ஒரு மனநிலைச் சாதனைதான். தியானம்/நிசப்தம்/அமைதி/அழகு/எல்லையற்ற சுதந்திரம்/ சாந்தம் – என்ற ஜே.கே. வார்த்தைகளின் கூட்டு மொத்த அர்த்தம் இதுதான் – இந்த மனநிலைதான். இந்த மன நிலையைச் சாதித்துக் கொள்ள, மனிதர்களுடன் கொள்ளக் கூடிய உறவுகளை முழுமையற்றது, வன்முறையானது, பூசல் போராட்டம் மிக்கது, சுதந்திரமும், சிந்தனையும் அற்றது என ஒதுக்கியுள்ளார். இதனையொட்டி வரலாறு, மனிதனின் சமூக நடவடிக்கைகள், காலங்கள், கோட்பாடுகள் எல்லாவற்றையும் நிசப்தத்தைக் குலைத்து விடுபவையாகத் தள்ளி வைக்கிறார். இது பற்றி ஞானி சரியாக வரையறுத்திருக்கிறார்.

அன்பு, ஆசை, சுதந்திரம், சிந்தனை அனைத்தையும் ஜே.கே. 'முற்றான' நிலையிலேயே வைத்துப் பார்க்கிறார். இயக்கத்தில் இவை இப்படி இல்லை. சார்புநிலை கொண்டவை. தனக்கும், பிறருக்கும் இந்த முழுமை நிலையை வரலாற்றின் வழியே செயல்பாட்டின் மூலம் சாதிப்பதைத் தொடராத ஜே.கே.இந்த வழியை முழுவதுமாய் மறுத்து, தன்னளவில் சிக்கல் இல்லாத, முழுமையில் தோயக்கூடிய மனநிலையை மனப்பயிற்சி மூலம் சாதித்துக்கொள்ளச் சொல்லுகிறார். புற உலகில் எத்தனை முரண்பாடுகள் இருந்தாலும், தனக்குள் முரண்பாடில்லாமல் செய்யச் சொல்லுகிறார்.

வரலாற்றில் கட்டப்பட்ட, முழுமையற்றவற்றை ஏற்கிற ஞானி, அறிவு, சிந்தனையின் குறைபாட்டை ஒத்துக்கொள்கிற ஞானி, அமைதி, சாந்தம், நிசப்தத்தில் புதியது படைப்பதை சிலாகிக்கிற ஞானி, இதற்கான தீர்வுக்கு மனஉலகைச் சரணடையவில்லை. தேடல், உண்மை, போராட்டம் வேண்டாம் எனக் கூறவில்லை. ஆனாலும் ஞானி, ஜே.கே.யுடன் இந்த மனநிலையைப் பெறுவதில் ஒன்றுபடுகிறார். இந்த முரண் பாட்டுக்கு விளக்கம் என்ன?

கோட்பாடுகள், சித்தாந்தங்கள் வெறும் தப்பியோடல்கள் என்கிற ஜே.கே.போல இவரும் தப்பியோடல் எனக்கூறாமல், ஜே.கே.யின் Aesthetic Sensibility- ஐ ஏற்றுக்கொள்ளுகிறார் ஞானி.

சந்தியாசியும், கலைஞனும், புரட்சியாளனும் மேற்கொண்டிருக்கிற ஒருவித தீவிர மனநிலை குறித்து ஞானி இந்த ஏற்பினைச் செய்கிறார் என்றே படுகிறது. சாந்தநிலை, தனக்குள் முழுமையைத் தக்க வைத்துக்கொள்ளுதல், அன்புநிலை, நிசப்தநிலை, தன்னையறிதல், சுதந்திர மனநிலை, தன்னை முற்றாய்ப் புற உலகில் இழக்காதிருத்தல் என்பவை இந்த சந்தியாசிக்கும், கலைஞனுக்கும், புரட்சிக் காரனுக்கும் வாய்த்திருப்பதாக ஞானி கருதியிருக்கிறார். தீவிரமான செயல்களில் ஈடுபடுபவனுக்கு வேண்டிய ஒரு மனநிலை இது என்கிறார் ஞானி. 'போர் நடுவில் கூட இந்தநிலை (சாந்தநிலை) பெறாதவன் நிற்க முடியாது என்கிறார்.' 'கடமையைச் செய்; பலனை எதிர்பாராதே' என்ற கூற்றின் பொருளும் இதுதான் என்கிறார் ஞானி.

இந்த ஒப்பற்ற மனநிலையை வரலாறு முழுவதும், தீவிரமான சமூக ஈடுபாடு கொண்ட உன்னத மனிதர்கள் (கிறிஸ்து, புத்தர், லெனின், காந்தி, மாவோ) பெற்றிருப்பதை ஞானி மனதில் வைத்து எழுதியிருக்கக்கூடும்.

Human Subject பற்றிய விளக்கங்கள் ஒரு தீவிர வர்க்கப் போராட்டத்தின் தத்துவத்திற்கு முக்கியம். மார்க்சியம் இது பற்றி இந்த அக உலகம் குறித்து விரிவாகக் கூறவில்லை – ஆரம்பத்தில் 'அந்நியமாதல்' நிலையில் இது விளக்கப்படினும், தீவிர செயல்பாட்டில் ஈடுபடுவது தொடர்பாக, மனித மனநிலை இயக்கத்தின் நிலைகள் விரிவாகப் பேசப்படவில்லை. ஃபிராய்டிற்குப் பின், உளவியல் வேறுவழி சென்றது. இருத்தலியலில் இந்த செயல்பாடு குறித்த பார்வைகள் வைக்கப்பட்டன. இந்தப் பின்னணியில் ஞானி இத்தகு தீவிர மனநிலை குறித்த பார்வைகளை வைக்கிறார். கிறிஸ்துவுக்கும், புத்தனுக்கும், வாய்த்த அந்த செயல்மிக்க தீவிர மனநிலை இன்றைய ஒவ்வொரு வனுக்கும், ஒவ்வொரு புரட்சிகரப் போராளிக்கும் வாய்க்க வேண்டியதை மார்க்சீய 'மனித மனநிலை' உருவாக்கத்தில் காண வேண்டும்.

ஜே.கே.யின் புறஉலகம் பற்றி நினைக்காத மனச்சுகம், சமயம் போன்ற ஒரு போதைதான். மணல்மேட்டு வீடுதான். புறஉலகப் போராட்டம், மாற்றம் குறித்த அவசியம் வேண்டாத ஆதிக்க வர்க்கத்தானுக்கு இந்த மனச்சுகம் மிகவும் தேவை. போதைப்பொருள் வடிக்கிற KODAYS வியாபாரிகளுக்கு உண்மையில் சுகம். சொர்க்கம் தருகிற ஒரு அகப்போதைதான் இது. இந்த அடிப்படையில் இந்த வர்க்கப் பொருத்தமிக்க சிந்தனைச் செயல்பாட்டில் ஜே.கே.யின் அகஉலகம் பற்றிய ஞானியின் தேர்ந்தெடுத்த சிலாகிப்புகள் எந்த அளவிற்கு மார்க்சிய மனிதனுக்குப் பொருந்தும் என்பதை மனச்சாய்வின்றி அவசரப்படாமல் பார்க்க வேண்டும்.

**கௌதமன்**

# ஜே.கே.வை மட்டுமே புரிந்து கொள்ள கொளத்துப் போய்.....

சரியான முழு உலகப் பார்வை மட்டுமின்றி சரியான முழு அகப்புரிவும் தேவையாகத்தான் இருக்கிறது. இத்தேவையை நாமே உணராதவரை உணர்த்துகிறோம் என ஒட்டுண்ணி மதங்கள் இருக்கவே செய்யும், உணர்த்தாமல், அந்நிய மாதலின் மற்றும் அளவு மாற்றத்தின் உச்சிக்கு ஏறியபடி இருக்கும் இன்றைய இந்தியாவுக்கு, உபநிடதக் கருத்து களையே தேவையான அளவில் எளிதாக அளிப்பதைப் பெருமையாகச் செய்கிறார்கள் ஜே.கிருஷ்ணமூர்த்தி போன்றவர்கள். இவர்கள் வெளியிடுவதும் ஒரு இலட்சிய நோக்கையே. நடைமுறை நோக்கு அல்ல. இவர்கள் நம்மிடம் வேண்டுவது ஒரு மனவியல் புரிவையே, அதை மட்டுமே.

இதற்கு மேல் புறச்செயலினைப் பற்றிச் சொல்லாமல் ஜே.கே. விடுவதானது, எதார்த்தத்தைப் பற்றிய சரியான புரிவு எதற்கோ என நம்மில் கேள்வி எழுப்புகிறது.

சிந்தனை (Thought) என்பது ஜே.கே.வைப் பொறுத்தவரை, சேமிக்கப்பட்ட இறந்தகாலச் செத்த அறிவுடன் முட்டிக்கொள்ளும் அர்த்தமற்ற பிரதிச் செயல். சிந்தித்தல் (Thinking) என்பது, உயிர்களில் கணத்துக்குக் கணம் இருக்கும் செயல், சிந்தனை என்பது மரபு, பழைமை, இறந்தது, செத்தது. சிந்தித்தல் என்பது புரட்சி, புதுமை, நிகழ்காலம், ஜீவனுள்ளது. சிந்தித்தலில் (நிகழ்காலத்தில்) சிந்தனை (இறந்தகாலம்) குறுக்கிடாமல் இருக்கும்போது மட்டுமே புறத்துடன் நேரடித் தொடர்பு கொள்ளவும் புரிந்து கொள்ளவும் முடியும். புரிவு நிகழும் பொருள்கள் இடையேதான் உறவு ஏற்பட முடியும் சரியான உறவின்றி ஆரோக்கியமான சமூகமிருக்க முடியாது.

சிந்தனையைப் புறக்கணிக்கும் ஜே.கே. சிந்தித்தலை ஒப்புக்கொள்கிறார். சிந்தனைப் பழமையின் நல்ல அம்சங்களை எடுத்துக்கொள்ளக் கூடாதா என்பதற்கு ஏதும் கூறுவதாகத் தெரியவில்லை. மேலும் அவ் வக்கணத்தில் இருப்பவர்கள் –

அறியாததன் முன் பிரவேசிப்பவர்கள் – அப்போதிருந்தே செயல்படத் தொடங்குவர் என்று அவர் கூறுகிறார். எந்தச் செயல்? முதலாளியத்தில் ஏற்கெனவே உள்ள கடமைகளா? அல்லது அதைத் தகர்ப்பதற்கான கடமைகளா? ஜே.கே. இது பற்றி ஏதும் பேசுவதில்லை. தவிர, மனத்தையும் புறத்தையும் எப்போதும் முழு விழிப்புணர்வுடன் கவனித்துக் கொண்டிருப்ப வர்களுக்கு (பிரச்சினை புறத்திலேயே தோன்றுவதாயினும் அகத்தில் பிரதிபலித்தே வெளிப்படுகிறது என்பதால்) அப்பிரச்சினை விதையில் சலனம் கொடுத்ததுமே, விதையின் தாவரமாகும் வளர்ச்சிப் போக்கை ஆழ்ந்து கவனித்துச் சரியான தீர்வை நடைமுறைப்படுத்த இயலும் என்று ஜே.கே.கூறுவதை நாம் ஏற்பது கடினேம. ஜே.கே.வின் வாதத்தை அவரின் வட்டத்துக்குள் வைத்து மட்டுமே புரிதல் இயலும். பின், நாம் உடைத்துக்கொண்டு கிளம்ப வேண்டியதே, ஜே.கே. அவ்வாறு கிளம்பவில்லை எனினும்,

ஜே.கே.வின் பணி அரைகுறையாகவே நின்று போய்விடுகிறது. புரிதலோடு நின்று விடுகிறார். மேற் கொண்டும் ஆன செயலுக்கு அவர் நம்மில் இடம் கொடுப்பதில்லை. இது அவர் பிரமாதப்படுத்தும் முழுப்பார்வை ஆகாது. ஓர் ஆரம்ப, மனம் பற்றிய புரிவிலேயே நின்று, மேற்கொண்டு இயங்க மறுப்பது ஜே.கே.தன்னையே மறுப்பதாகும். ஏனெனில் தடைபடாத, தேங்காத, இறுகாத இயக்கமே ஜே.கே.விழைவது. எனவே, முதலில் புரட்சி சித்தாந்த ஒளியில் ஜே.கே.வைச் சரியாக இனம் காண்பதும், பின் அவரைக் கடந்து உலகியலில் பயணம் செய்வதும் இயங்குவதும்தான் சரியான செயலாகும். இவ்வித விமர்சனத்தையே ஞானி இந்நூலில் அளித்திருக்கிறார். இவ்வாறு இருசார்பிலான புரிதலுடன் ஞானி எழுதியிருப்பது போன்ற விமர்சனம் வந்து வாய்ப்பது அரிது. ஜே.கே.வின் விரிந்த உருவம் கேலிச்சித்திரமாகா வண்ணம் தேர்ந்த கவனத்துடன் செய்திருக்கிறார். எங்கெங்கு ஜே.கே.வைக் கடக்க வேண்டும் என்பதை ஞானி மென்மையாகக் கோடிட்டுக் காட்டுகிறார். நூல் கண்ணியமான முடிப்புடன் முடிகிறது.

ஜே.கே.வ்வை மட்டுமே புரிந்து மிகவும் கொள கொளத்துப் போய் உறுதியான நிலைப்பாடு எடுக்க முடியாமலும் செயலில் ஈடுபாடு இன்றியும் சமூகப் பிரக்ஞை இருந்தும் கூட நடைமுறையில் அக்கறை இன்றியும் இருப்போர் ஜே.கே.வைக் கடந்து இயங்கவும் மார்க்சை மட்டுமே கற்று, சூத்ரங்களில் இறுகி, மனச்செயல்பாடுகளைப் புரிதலில் விருப்பமின்றியும், அடுத்தவர் கருத்துக்கு மதிப்பளியாது, மன ஆதிக்க விருப்பம் உடையவராய் பிறரைப் பகைநோக்குடன் வீசியெறியும் 'தோழர்கள்' நெகிழ்ச்சியான அழகிய மனம் பெறவும், இருவரையுமே படிக்காதவர்களுக்கு எடுத்த எடுப்பிலேயே நல்லதோர் அறிமுகமாகவும் இச்சிறு நூல் உதவும்.

**சிங்கராயர்**

## இரண்டாம் பதிப்பின் - முன்னுரை

இந்தச் சிறு நூலில் இரண்டு பகுதிகள் உள்ளன. '**மணல்மேட்டில் ஓர் அழகிய வீடு**' என்பது 1976இல் எழுதினேன். '**ஞான வெளியில் ஜே.கே.**' என்பது 2002இல் எழுப்பட்ட தனிக்கட்டுரை. ஜே.கே.வைப் பொறுத்தவரை என் கருத்தில் இதுவரையிலும் எந்த மாற்றமும் இல்லை. இரண்டு கட்டுரைகளுமே '**மணல்மேட்டில் ஓர் அழகிய வீடு**' என்னும் தலைப்பிலேயே வெளிவருவதை வரவேற்கிறேன்.

இந்த இரண்டாம் பதிப்பை வெளியிட வேண்டுமென்று நண்பர் திரு.வேணுகோபால் அவர்களை நான் கேட்ட பொழுதே, என் வேண்டுகோளை அன்புடன் ஏற்று வெளியிடுவதற்காக என் மகிழ்ச்சியையும், நன்றியையும் விழிகள் பதிப்பகத்திற்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கோவை **ஞானி**

1.8.2012

## உள்ளடக்கம்

முதற் பதிப்பின் முன்னுரை / 3
அணிந்துரை / 8
இரண்டாம் பதிப்பின் முன்னுரை / 12
பதிப்புரை / 14
1. பார்வை – பகுதி – முழுமை / 15
2. முரண்பாடு / 17
3. தன்னை அறிதல் / 19
4. அமைதி, சிந்தனை / 20
5. காரணம் – காரியம் – இயக்கம் / 22
6. கட்டுப்பாடு, சுதந்திரம் / 23
7. வாழ்வும் சாவும் / 25
8. பயம் – தப்பியோடுதல் / 27
9. உண்மையான சமயம் / 29
10. கல்வி – தன்னறிவு / 31
11. நிதர்சனம் / 32
12. தேடல் / 34
13. அனுபவம் – சுதந்திரம் / 36
14. அறிதல் / 38
15. சிந்தனை – அனுபவம் / 40
16. புதியது – பழையது / 43
17. அழகு / 45
18. உறவு – சுரண்டல் – போராட்டம் / 47
19. இருமை – போராட்டம் / 49
20. சுதந்திரம் – தியானம் / 51
21. தற்கொலை / 53
22. தன்னலம் – வன்முறை – கலாச்சாரம் / 54
23. நிசப்தம் / 56
24. தியானம் – அன்பு – அழகு / 57
25. சீர்திருத்தம் – புரட்சி / 59
ஞானவெளியில் – ஜே.கிருஷ்ணமூர்த்தி / 61

# 01

# பார்வை – பகுதி – முழுமை

**ஜெ.கிருஷ்ணமூர்த்தி:**

ஒரு மரம், உறவு, ஒரு செயல் – எதுவாக இருந்த போதிலும் அ   தை முழுமையாகப் பார்ப்பதற்கு மனம், பின்னங்களிலிருந்து விடு பட்டிருக்க வேண்டும். பின்னத்தின் இயல்பு என்பது, ஒருவர்தான் நோக்குவதற்குரிய மையமாகிறது. பின்னணி – கத்தோலிக்கர் எதிர்ப்பாளர், பொதுவுடமைவாதி, சமதர்மவாதி, குடும்பம் என்ற மரபு – இந்த மையத்திலிருந்துதான் ஒருவர் நோக்குகிறார். ஒரு குறிப்பிட்ட அனுபவத்திலிருந்து – அதுதான் ஒருவரின் பின்னணி, அதுதான் 'நான்' – நோக்கும் வரை, ஒருவர் முழுமையாக பார்க்க முடியாது... ஆகவே, பின்னத்தை விட்டுவிடுவது எப்படி என்பது பிரச்சினையாகாது. ஒருவருடைய மாறாத பிரச்சினை 'பின்னங்களில் செயல்படும் நான், பின்னங்களில் செயல்படாதிருப்பது எப்படி' என்பதுதான், ஆனால் இதுவும் தவறான கேள்விதான். ஒருவர் மனவியல் ரீதியாக, பற்பலவற்றைச் சார்ந்திருக்கிறார். அறிவு ரீதியாக, சொற்கள் வழியாக பகுத்தறிதல் மூலமாக, அந்தச் சார்பின் காரணத்தையும் கண்டறிகிறார். இத்தகைய கண்டு பிடிப்பும்கூட, பகுதியானதுதான். காரணம், அது அறிவு ரீதியானது. சொற்கள் வழியே செயப்படும் பகுத்தாய்தல் இதன் பொருள், சிந்தனையால் ஆராயப்படுவது எதுவும் தவிர்க்க இயலாமல் பகுதித் தன்மையானதுதான். ஒன்றைப் பற்றி ஒருவர் முழுமையாக பார்ப்பது என்பது, சிந்தனை இடையில் நுழையாத போதுதான், சொற்கள் வழி அறியாத போதுதான், அறிவு ரீதியாக அல்லாமல் பார்க்கும் போதுதான் – இந்த ஒலி வாங்கியை – விருப்பு வெறுப்பு இல்லாமல் – இதன் இருப்பை நான் பார்ப்பதைப் போன்ற உண்மையாகப் பார்க்கும் போதுதான் சாத்தியம். அப்போதுதான் உண்மையானதை அவர் பார்க்கிறார்.... மையம் எதுவும் இல்லாமல் சிந்தனை இயல்பின் கட்டமைப்பு எதுவும் இல்லாமல் ஒருவர் நோக்குவது இப்படித்தான்.

**ஞானி:**

குறிப்பிட்ட நோக்கு நிலையிருந்துதான் ஒருவர் எந்தப் பிரச்சினையையும் பார்க்க இயலும் என்பது உண்மை. இதிலிருந்தும் சில உண்மைகள் பார்வையாளர்க்கு வசப்படும் என்பதும் உண்மை. இந்த நோக்கு நிலை நாளுக்கு நாள் விரிவடையும், விரித்துக்கொள்ள முடியும் என்பதும் உண்மை. இதைத் தவிர மனிதனுக்கு வேறு வழியுமில்லை. நோக்குநிலை விரிவடைய அடைய அதிக அளவிலான உண்மையை மனிதன் பெறமுடியும்.

இந்த உண்மைகளை வெளிப்படுத்தச் சொற்கள் பலவீனமானவை என்பதும் உண்மைதான். ஒருவகையில் இதுவே கூட மனிதனுடைய பலம்தான் மனிதன் நாளுக்குநாள் நுணுக்கமான கூரிய சொற்களைக் கண்டறிந்து – உண்மைகளை வெளிப்படுத்த முடியும் என்பதும் உண்மை. ஜே.கே. என்ன கருதுகிறார்?

ஒரு குறிப்பிட்ட நோக்கு நிலையில் முழு உண்மை வசப்படுவதில்லை என்பதால், நோக்கு நிலையிலிருந்து உண்மையைக் காண்பதையே மறுக்கிறார். இதற்குச் சிந்தனை முறை என்று கூறுகிறோம். இந்தச் சிந்தனையையே மறுக்கிறார். சொற்கள் உண்மையைப் போதிய அளவில் வெளிப்படுத்தவில்லை என்பதால் சொற்களையே மறுக்கிறார். சிந்தனையற்ற நிலையே, உண்மையைத் தரிசனம் செய்யும் நிலை என்று கருதுகிறார்.

ஜே.கே.யின் கூற்றில் இருக்கும் உண்மை என்ன?

ஒரு குறிப்பிட்ட நோக்கு நிலைக்குள் – பகுதியறிவுக்குள் – சொற்களுக்குள் முடங்கி விட வேண்டாம். பகுதிக்குள் முடங்குவது இறப்பில் முடங்குவதாகிறது. இயக்கத்தைக் கவனி. நிகழ்காலத்திற்குள் இரு. அறிவைத் தேடுவதுதான் மனிதனுக்குப் பிரச்சினையா? எல்லாவற்றுக்கும் முடிவு சாமுந்த நிலை. இது, பகுத்தறிவுக்கு அப்பால் சொற்கள் அற்ற நிலை.

# 02

## முரண்பாடு

**கிருஷ்ணமூர்த்தி:**

எல்லா முரண்பாடுகளுக்கும் வேர் ஆசைதான். நான் இதைப் பெற வேண்டும்; அதைத் தவிர்க்க வேண்டும்; எனக்கு இன்பம் வேண்டும், பாலுணர்வு வகையில் இன்பம்; புகழ் பெறுவதில் இன்பம்; ஆதிக்கம் செய்வதில் இன்பம்; பலவகையான நுணுக்கமான வகை இன்பங்கள் எனக்கு வேண்டும். இதைப் பெறாத போது, பெற இயலாத போது, பெறுவதற்கான துன்பம் ஏற்படுகிறது. அது ஒரு முரண்பாடு. ஆகவே நாம் ஒரு முரண் நிலையிலேயே வாழ்கிறோம். நான் இதைச் சிந்திக்க வேண்டும். ஆனால் அதைத்தான் சிந்திக்கிறேன். நான் அதுவாக வேண்டும்; ஆனால் நான் இப்படித்தான் இருக்கிறேன். மனித சமுதாயத்தில் சகோதரத்துவம் மலர வேண்டும்; ஆனால் நான் தேசியவாதியாக இருக்கிறேன். எனது சர்ச்சை எனது கடவுளை, எனது வீட்டை, எனது குடும்பத்தை நான் விடுவதில்லை. இவ்வாறு நாம் முரண்பாட்டில் வாழ்கின்றோம். அதுதான் நமக்கு வாழ்வு. இந்த முரண்பாட்டை தனக்குள் சீர்பட இணைக்க முடியாது. இது தவறுகளில் ஒன்று. ஆசையின் இயல்பை நாம் முழுமையாகப் புரிந்துகொள்ளத் தொடங்கும் போதுதான், முரண்பாடு முடிவுக்கு வருகிறது.

ஒரு முரண் நிலையில் நான் இருப்பதைப் பார்க்கிறேன். இந்த முரண் எப்படித் தோன்றியது என்று அறிகிறேன். இந்த முரண்பாடு என்பது ஒரு சீர்குலைவு, சிந்தனையால் இந்த சீர்குலைவு ஒழுங்கு பெறாது. காரணம், சிந்தனை பகுதிகளில் அமைவது, கட்டுப்பட்டது. சிந்தனை என்பது நினைவின் பிரதிபலித்தல். பகுதிகளாக இருக்கும் நினைவு இந்த முரண்பாட்டின் மீது செயல்படும் போது, அது மேலும் முரண்பாட்டைத் தோற்றுவிக்கிறது. இந்த நிகழ்வுப் போக்கை நான் இவ்வாறு முழுமையாகப் பார்க்கிறேன். இவ்வாறு பார்த்தாலே, தனக்குள் முரண்பாடில்லாத செயலாகும்.

**ஞானி:**

குறுகிய நோக்கில் மட்டுமே, இன்பம், புகழ், கடவுள், வீடு, குடும்பம் என்று மனிதன் கட்டப்பட்டிருக்கிறான். ஆசைதான் இவனை இவ்வாறு இயக்குகிறது. இது மட்டுமே உண்மை என்றால் ஜே.கே.சொல்வது முற்றிலும் சரி. இந்நிலையில் முரண்பாடு தவிர்க்கப்பட வேண்டும் முரண்பாடு எந்த நிலையிலும் தீராது; ஆகவே சிந்தனையிலிருந்து முரண்பாட்டை நீக்க வேண்டும் முரண்பாடு தீர சிந்தனை நீங்க வேண்டும். ஜே.கே.வின் சிந்தனை சரி தானா?

சிந்தனை, பகுத்தறிவின் மூலமே – பகுத்து அறிதலின் மூலம் – பகுதிகளின் மூலமே செயல்படுகிறது. பகுதியை இது முழுமையாக்கி உண்மையைச் சீர்குலைக்கிறது. ஒவ்வொரு கால சிந்தனை, அக்கால நிலையால் கட்டுப்பட்டது. சிந்தனை, முன்னைய சிந்தனையோடு

இன்றியமையாத உறவுடையது. காலம் மாறிய நிலையிலும், சிந்தனை முன்னைய கூறுகளை உடன் கொண்டு வருவது. புதியது, அது வரும் வேகத்திலேயே சிந்தனைக்குள் நுழைந்து விடுவதில்லை. இப்படிக் கூறுவது, சிந்தனையின் பாத்திரத்தை மறுப்பதாகாது. சுற்றுப்புற நிலைமைகளை, அவற்றின் இயக்க வேகத்திலேயே காண்பது, பழங்கால மனிதனுக்குச் சாத்தியமில்லை.

இக்கால மனிதன் இதில் அடைந்துள்ள முன்னேற்றம் மிகவும் பெரியது. இடைவெளி இன்னும் இருக்கிறது என்பது உண்மைதான். இடைவெளி தொடர்ந்து குறுகும் என்பதும் என்றைக்குமே சிறிய அளவிலாவது இருக்கலாம் என்பதும் மறுப்பதற்கில்லை. இடைவெளி அற்றுப் போகாமையால் குறைபாடுகள் இருக்கின்றன என்பதும் சரிதான். இது வரலாறு விஞ்ஞான வளர்ச்சியோடு சம்பந்தப்பட்ட பிரச்சினை. இதைத் தத்துவம் கவனிப்பது தவறில்லை. ஆனால் இதற்குள்ளேயே தத்துவம் குறுகிவிட வேண்டாம்.

மனிதன் தான், தன் குடும்பம், தன் ஊர், தன் தேசம், தன் காலம் என்ற குறுகிய எல்லைகளுக்குள் வாழும் போதே, தனக்குள், தன்னையும் தன் குடும்பத்தையும், தன் காலத்தையும், தேசத்தையும் மீறிய வாழ்விலும் இயங்குகிறான். பகுதிகளுக்குள் வாழ்வது தவிர்க்க இயலாதது போலவே, பகுதியை மீறிய முழுமைக்குள் வாழ்வதும் மனிதனின் இயல்பாகிறது. இப்பகுதிகள் ஒன்றிலிருந்து மற்றவை முரண்பட்டவை. இவற்றினூடேதான் மனிதன் வாழ்கிறான். இப்பகுதிகள் முரண்பாடுகள் இல்லாமல் முடியுமா? இவற்றை நீக்க முடியுமா? முரண்பாடுகள் நீங்கிய நிலையில் மனிதனின் இருப்பு, இயக்கம் சாத்தியமா? இல்லையே! அப்படியானால் ஜே.கே. செல்லும் வழி.......?

# 03

# தன்னை அறிதல்

**ஜெ.கிருஷ்ணமூர்த்தி:**

உன்னை அறிவது, என்பது மிகச்சிக்கலான, உயிருள்ள ஒன்றை அறிவதாகும். இது ஒரு இயக்கம் போன்றது; இடைவிடாமல் இயங்கிக்கொண்டே இருக்கிற ஒன்று இது. உன்னை அறிய, கவனிக்க, ஒப்புமை பார்த்தல், தீர்ப்பு வழங்குதல், கண்டித்தல் அல்லது நியாயப்படுத்துதல் என்ற உணர்வு ஏதும் இல்லாத ஒரு மனம் உனக்குத் தேவை. வாழ்க்கை ஒரு பிரம்மாண்டமான உயிருள்ள இயக்கமாக இருப்பதனால், உனது விருப்பு வெறுப்புகள் கற்பனைகள் உனது தேவைகளில் அதைக் கட்டுப்படுத்திவிடக் கூடாது. இவையும் கூட அவ்வியக்கத்தின் பகுதிகள்தான் என்ற போதிலும் உனது தேவைகள் விருப்பங்கள் என்ற குறிப்பிட்ட வடிவத்தில் அந்த இயக்கத்தைக் கட்டுப்படுத்தினால், நீங்கள் எப்போதும் பிரச்சினையோடுதான் இருப்பீர்கள்.

இன்பம், அச்சம் ஆகியவற்றின் இயல்பை உணர்ந்த மனம், வன்முறையை ஏற்காது. தன்னோடும் உலகத்தோடும் அமைதியாக இருக்கும்.

ப. 54 - 55 TD

**ஞானி:**

தன்னையறிதல், தத்துவத்தில் இன்றியமையாத, சாரமான, சிக்கலான பிரச்சினை.

இயக்கத்திலிருக்கும் ஒன்றை விலக்கி, நிறுத்தி வைத்து, ஒப்புமையால் விளக்குதல் கண்டித்தல் நியாயப்படுத்துதல் – முற்றாகச் சரியில்லை.

அதாவது தீமை, அநியாயம், கொலை, திருட்டு முதலியனவாகத் தீர்ப்புக் கூறப்படுகிற கண்டிக்கப்படுகிற செயல்கள், இயக்கத்தின் பார்வையில் அத்தகையவை அல்ல.

இயக்கத்தைக் கட்டுப்படுத்தி, நிறுத்தி வைத்துப் பார்க்கும் போது, மிஞ்சுவது பிரச்சினைகள்தான்.

இப்படிச் சொல்வதானால் எல்லாமே சரி; எல்லா நிலைகளிலும் சரி என்று ஆகிவிடுமா?

இயக்கத்தை நிறுத்தி வைக்கச் செய்யும் முயற்சிகள் இயக்கத்தின் மீது விழும் பாரங்கள் இவை பிரச்சினைகள்.

திருட்டு முதலியவை இப்படி ஆகிவிடலாம். வணிகம், சர்வாதிகாரம் இப்படி ஆகிவிடுகின்றன.

இது வரலாற்றியலில் கடுமையான பிரச்சினை. இப்பிரச்சினையின் தீர்வு கடுமையானது. இயக்கத்தை மட்டுமே பார்த்துப் பயனில்லை. தேக்கத்தையும், மெல்லச் செல்வதையும் சேர்த்துப் பார்த்தாக வேண்டும்.

# 04

# அமைதி – சிந்தனை

**ஜெ. கிருஷ்ணமூர்த்தி:**

அமைதி நிலவும் போதுதான், சிந்தனையின் தொடக்கத்தை அறிய முடியும். பயிற்சி வழியேயல்லாமல் கட்டுப்பாட்டின் மூலமாக அல்லாமல், தியானத்தின் பலவகை படிவங்களின் மூலமாக அல்லாமல், அந்த அசிங்கமான தொழிலின் பிற வகைகளிலல்லாமல், மனம் இயல்பாக அமைதியுறும் போதுதான் சிந்தனையின் தொடக்கத்தை அறிய முடியும். அமைதியில்தான் நான் எதையும் கண்டறிய முடியும். அப்போதுதான் புதியதொன்றைப் பற்றிய வியப்புக்குரிய கண்டறிதலை மனம் பெற முடியும். இத்தகைய அமைதியைப் பயிற்றுவது சாத்தியமில்லை. இதைச் சிந்தனையால் சேர்க்க முடியாது. சிந்தனை இதைச் சேர்க்க முயன்றால், அது செத்துவிடும். அது தேங்கிவிடும். சிந்தனை எதையாவது சேர்க்க முயன்றால், சிக்கல் ஏற்பட்டு விடுகிறது.

ப. 109 TD

**ஞானி:**

மனம் புதிய பேருண்மைகளை நோக்கித் தாவிச் செல்லும் போது, முன்னைய சிந்தனைகள் கருத்துகளிலிருந்து ஒரு இடையறவு, பாய்ச்சல் நேர்கிறது.

Inspiration-intuition என்று பலவகையாக இதனைக் குறிக்கிறோம்.

இந்த இடையறவில், முன்னையவை ஒதுங்கி, மறைகின்றன.

நிசப்தமான சில நொடிகள், சில நேரங்கள் வாய்க்கின்றன.

புதியவை பிறக்கின்றன. பெரும் வெளிச்சத்தோடு, பாய்ச்சலோடு – இவை படைப்புக்கள்.

இந்தச் சில நொடிகள், கனமானவை; எளியவை; அழகானவை; வெளிச்சம் நிரம்பியவை: புனிதமானவை.

ஐன்ஸ்டீனுக்கும் சரி; பாரதிக்கும் சரி; இது உண்மை.

இந்த நிசப்தம், கற்றுக்கொடுத்து வராது.

பிரச்சினைகளோடு – அவற்றின் தீர்வை நோக்கிய மனிதர்களுக்கு வாய்க்கும் சில உன்னத நேரங்கள் இவை.

பிரச்சினைகள் அற்றவனுக்கு இதைக் கற்றுக்கொடுக்கவே முடியாது.

மீறிப் போனால் அடயோகம்தான் அவனுக்குச் சாத்தியம். அவன் வால்மீகியாக முடியாது.

புதியதொன்று பிறக்கும் மனநிலையை ஜே.கே. மீண்டும் தவறாகவே கணிக்கிறார்.

போகம், தியானம் முதலியவை கற்றுக்கொடுத்து வருவதில்லை. ஆனால் இவை கற்றுக்கொள்ளப் படாமலும் இல்லை.

முன்னைய எல்லாமே அற்ற மன நிலையிலிருந்து புதியது பிறப்பதில்லை. கல்லுக்கு ஞானம் வாய்க்காது. புத்தனுக்கே வாய்க்கும்.

முன்னையவை, புதியதொரு கோலத்தில் மீண்டும் இணைந்து, புதிய வெளிச்சத்தோடு வெளிப்படுகின்றன. $E = MC^2$ மாதிரி.

புதிய உண்மைகளை, மீண்டும் பழைய சிந்தனை முறையில் தொடுக்கும் போது, கொஞ்சம் சாவும் நேரத்தான் செய்கிறது. புதிய கள்தான் கிடைப்பது பழைய மொந்தை; வேறு வழியில்லை. ஆனால், புதியது, புதியதுதான்.

05

# காரணம் – காரியம் – இயக்கம்

**ஜெ.கிருஷ்ணமூர்த்தி:**

காரணமாக எது இருந்ததோ அதுவே விளைவாகிறது. விளைவு மீண்டும் காரணம் ஆகிறது. திட்ட வட்டமான காரணமோ, விளைவோ இல்லை. திட்டவட்டமான காரணமாகவோ, விளைவாகவோ இல்லை. திட்டவட்டமான – தீர்மானிக்கப்பட்ட காரணம் என்று இருந்தால் எல்லாமே தீர்மானிக்கப்பட்டதாக இருக்கும் அப்போது விளக்கம், ஆராய்ச்சி, இயக்கம் சாத்தியம் இல்லை. விதை குறிப்பிட்ட ஒரு மரத்தைத்தான் தோற்றுவிக்கும். இந்தக் கோட்பாட்டின் படியே கர்மா செயல்படுகிறது. தீர்மானிக்கப்பட்ட ஒரு புள்ளி இருக்கின்றதா? அல்லது மனத்தாலும், அறிவாலும் தொடர்ந்து கவனிக்கத் தக்க, இடைவிடாத, உயிருள்ள இயக்கம் இருக்கிறதா? அறிவு கூறுகிறது: காரணம், விளைவு இருக்கிறது: அந்த உருவ வரைவில் அது வரையறுக்கப்படுகிறது.

ப.112 TD

**ஞானி:**

காரணம் என்றும் காரணமாக, விளைவு எப்போதும் விளைவாக இருப்பதில்லை: இரண்டும், இயக்கவியல் உறவில் உள்ளன.

1. காரணம் எப்போதும் காரணமாகவே இருந்தால், இயக்கம் இல்லை. ஆய்வும் தேவையில்லை.

ஜே.கே.வின் கருத்துகள் சரியானவை. காரணம் காரியம் தனித்தனியே இருப்பதாகக் கூறுவது, தர்க்கம். இதையே அறிவாக மயங்குவது – தேவையில்லை.

2. ஜே.கே. இதைக் கூறுவது எதற்காக? அறிவை மீண்டும் மறுப்பதற்காக காரணந்தான், விளைவுதான், என்பது அறிவு. இயக்கத்தில் இது உண்மையில்லை. ஆகவே அறிவு தவறானது என்பது ஜே.கே.வின் வாதம் இயக்கவியல், அறிவின் இன்னொரு உயர் கட்டம்.

இவரது தர்க்கத்தைக் கடந்து இயக்கவியலில் இயங்குவது மனிதனின் வளர்ச்சிக்குத் தேவை.

தர்க்கத்தை அதன் குரங்குத்தனம் கண்டு, கைவிடுவது மனித வளர்ச்சிக்கு உகந்ததாகாது.

ஜே.கே. – எப்படி?

# 06

## கட்டுப்பாடு – சுதந்திரம்

**ஜெ. கிருஷ்ணமூர்த்தி:**

நாம் சுதந்திரத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறோம். சிந்திப்பவனாகிய நான், எனக்கு உரியனவாகிய எனது சிந்தனைகள் என்னிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாகிய உலகம் என்று நீங்கள் உலகத்தைப் பகுத்துக்கொண்டால் சுதந்திரம் உங்களுக்கு வராது. நீங்கள் அமெரிக்கர், ஸ்விஸ் நாட்டவர், இந்தியர் என்று இருப்பதானால், அதற்கேற்றவாறு நீங்கள் சிந்திக்கிறீர்கள். நீங்கள் ஒரு குறிப்பிட்ட கலாச்சாரத்தில் பிறக்கிறீர்கள்: நீங்கள் அதில் கட்டுப்படுத்தப்பட்டுள்ளீர்: அதனால் உருவாக்கப்பட்டுள்ளீர். பொதுவுடமை வாதிகள், இலட்சக் கணக்கான மனிதரை மூளைச்சலவை செய்துவிட்டனர்... இன்னொரு வகையில் சமயக் கோவில்கள் இதனையே செய்து விட்டன. ஆகவே, போர்களோடு கூடிய கலாசாரம் உங்கள் பகுதியாகிவிட்டது: நீங்கள் சமுதாயமும்தான். தனிநபரும்தான். இரண்டையும் பிரித்துவிட முடியாது: அச்சம் அற்ற நிலையில்தான் நீங்கள் இதிலிருந்து வெளியேற முடியும். அந்தக் கலாசாரம், சமுதாயம், பேராசை, பொறாமை சாதனை என்ற களத்திலேயே நீங்கள் இருக்கும் வரை நீங்கள் சுதந்திரமான மனிதராக முடியாது. உங்களுக்குச் சுதந்திரமான மன உறுதி இருப்பதாக நீங்கள் நினைக்கலாம். ஆனால் இந்தப் பேய்த் தனமான சமூகத்தில் நீங்கள் பகுதிதான். ஒரு கட்டுப்படுத்தப்பட்ட மனிதர்தான்.

ப. 100 TD

**ஞானி:**

ஒருவனுடைய சிந்தனை, செயல்முறை, வாழ்க்கை ஆகியவற்றுள் அவனது நாடு, இனம், தேசியம் முதலியவை இயங்குகின்றன.

குடும்பம், ஊர் என்பனவற்றை விட இவை பெரிய எல்லைகள் என்ற போதிலும் இவை மனிதனை சிறிய எல்லையிலிருந்து விடுதலை செய்வது போலவே, கட்டுப்படுத்தவும் செய்கின்றன.

இந்தக் கட்டுப்பாடுகள் இருக்கும் வரை, பேராசை, பொறாமை முதலிய தீய குணங்களால் இவன் சித்திரவதை செய்யப்படுவான். இவனுக்குப் பேரின்பம் வசப்படுவது இல்லை.

இவன் சுதந்திரவான் இல்லை.

இவனைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பது பேய்ச் சமூகம்தான்: இவன் ஒரு அடிமை தான்.

இவன்தான் போரை உலகியல்பாக ஏற்கிறான்.

2. இந்தக் குறுகிய எல்லைகள், காலத்திற்கு காலம் விரிந்து மனிதனின் சுதந்திரத்தை விரிவாக்கின என்பது உண்மை.

ஆனால் இன்றைய நிலையில் இவை உலகு தழுவி வளர வேண்டிய மனிதனுக்குக் கட்டுகள் ஆகின்றன.

தான் சுயமாக, சுதந்திரமாக சிந்திப்பதைப் போல ஒருவன் காட்டிக்கொண்டாலும், அவனும் சிலவற்றுக்குக் கட்டுப்பட்டே சிந்திக்கிறான்.

இவனது சிந்தனையைக் கூடப் பொறாமை, சாதனை முதலிய குணங்கள் தூண்டுகின்றன.

இவனது சிந்தனை எவ்வளவு சிறந்ததாக இருந்த போதிலும் இவனும்கூட கட்டுப்பட்டவன்தான்.

இந்தக் கட்டுகளைத் துறக்க, அச்சம் நீங்க வேண்டும்: உண்மைதான்; நான் இந்தியன் என்ற எல்லையைத் துறக்க எனக்கு வீரம் தேவை.

3. சுதந்திரம், தனக்குள் ஒடுங்கி விடுவதல்ல.

உலகில் விரிக்கப்பட வேண்டியது. இதற்கு வழி சிந்தனையைத் துறப்பதல்ல செயல்படுவது.

பொறாமை, சாதனை முதலிய குணங்களற்ற மனிதனை நாம் கற்பனை செய்து கொள்ள முடியும்.

அவனை நோக்கி நாம் இயங்க முடியும் – நமக்குள் இயல்பாகவே ஒரு கற்பனா உலகம் இயங்குகிறது.

ஜே.கே.வை நாம் இங்கு ஒத்துக்கொண்டு கடந்து செல்வது, தவிர்க்க இயலாதது.

# 07

## வாழ்வும் – சாவும்

**ஜெ. கிருஷ்ணமூர்த்தி:**

செறிவாக (intensely) வாழ்வது என்பது நேற்றையதற்கு – நேற்யை இன்பங்கள், அறிவு, கருத்துகள், தீர்ப்புகள், முட்டாள்தனமான சிறுசிறு சாதனைகள் எல்லாவற்றுக்கும் இறந்துவிடுவதுதான் குடும்பத்திற்கு, உலகத்தில் குழப்பங்களையும், உனக்குள் சிக்கல்களையும் கொண்டு வந்து சேர்த்து உமது சாதனைகளுக்கும் இறந்துவிடுவதுதான். அவ்வாறு அதற்கு இறப்பது ஒரு செறிவைக் கொணர்கிறது. பழைமை நின்றுவிட்ட, கழிந்துவிட்ட: எதிர்காலம் இறப்பைப் போலவே முடிவடைந்து விட்ட ஒரு மனநிலையைக் கொண்டு வருகிறது. ஆகவே வாழ்வது என்பது சாவது: நீ இறக்காவிட்டால் உன்னால் வாழ முடியாது. சாவுக்கும், வாழ்வுக்கும் இடைவெளி இல்லாவிட்டால், அப்போதுதான் சாவதன் பொருளை நீங்கள் உணரமுடியும். அப்போது மனம் வியக்கத் தக்க முறையில் புதியதாக, ஆர்வமுடையதாக, கவனமுடையதாக, களங்கமற்றதாக மாறுகிறது.

இத்தகைய நிலையில்தான் காலம் முடிவுக்கு வருகிறது: தேவைப்பட்ட இடத்தில் மட்டும் சிந்தனை செயல்படுகிறது. வேறு எந்த மட்டத்திலும் அல்லாமல், வேறு எதன் தேவைக்காகவும் அல்லாமல் சிந்தனை செயல்படுகிறது.

ப. 99 T.D.

**ஞானி:**

செறிவான வாழ்க்கை, வாழ வேண்டும் பழையதை நேற்றை, முட்டாள்தனத்தை, காலத்தைக் கருதி (காலத்தைக் கணித்து) சிக்கலில் அகப்பட்டுக்கொள்ளாமல், சோர்வில்லாமல், களங்கமற்று வாழ்வது செறிவான வாழ்க்கை. இறந்த காலத்துக்காகவோ எதிர்காலத்துக்காகவோ வாழக்கூடாது.

ஒவ்வொரு நாளும், முடியுமானால் ஒவ்வொரு கணமும் புதியதாக – புதியதை வாழ வேண்டும்.

பழையவற்றை, நமது சாதனைகளையே கூட, எறிந்துவிடாமல், அவற்றைத் தூக்கி வைத்துக்கொண்டு வாழக்கூடாது.

இது இதுவரை ஏற்கக் கூடியதுதான். இதைத்தான் ஜே.கே. அழுத்தங்கொடுத்துக் கூறுகிறார் என்றால் ஏற்கத்தக்கதுதான். பழையதற்கு, நேற்றுக்கு இறத்தல்: இறப்பே வாழ்வு, காலம் முடிவுக்கு வருதல் என்பவை அழுத்தங்கள்.

இத்தகைய வாழ்க்கைதான் அதன் பரப்பு முழுவதும் விரிந்து வளரும் வாழ்க்கை. இது நிச்சயம், செறிவுடையதாகும்.

இத்தகைய வாழ்க்கையின் போது பழைமை, நேற்று முதலியவை முற்றாக இறந்துவிடுகின்றனவா?

சொற்கள் அற்றுப்போய்விடுகின்றனவா? நினைவு இல்லாமற் போகிறதா? பழைய நினைவுகளை மீண்டும் புதிய பொருளில் புதுப்பித்து வாழ்வது – பழைய இலக்கியங்களைப் புதிய பொருளில் பார்த்து மகிழ்வது, பழைய கலைப்படைப்புக்களை மீண்டும் கண்டு மகிழ்வது எந்த வாழ்க்கை?

புதியவற்றுக்குள் பிரவேசிக்கும் போது பழையதை அனுபவித்து, கூர்மைப்பட்ட, விரிந்த, அழகு பெற்ற மனத்தைக் கூட்டிக்கொண்டு அல்லவா நாம் செல்லுகிறோம்?

அதாவது, வரலாறு, கலாச்சாரத்தின் தொடர்பு இல்லாமல் அதன் சாரத்தைச் செரித்துக்கொள்ளாமல், நாம் புதியதில் பிரவேசிக்க முடிகிறதா? நாம் மனிதராகத்தானே தொடர்ந்து இருக்கிறோம்.

செறிவான வாழ்க்கை அனுபவங்கள், காலத்தைக் கணித்து நடைபெறவில்லை. காலத்தை அவை வென்று விடுகின்றன. அதாவது, காலத்தை நாம் மறந்துவிடுகிறோம்: காலத்தை இழந்து விடுகிறோம்.

எதிர் காலத்துக்காக நாம் முற்றாக வாழ முடியாது: ஆனால் எதிர்காலத்தை நோக்கி நாம் வாழ்வதும் கூட நடைபெறத்தானே செய்கிறது!

நேற்றுப் படித்ததை இன்று திருப்பிப் பார்க்கிறேன், அதிலிருந்து புதியதைப் பெறுவதற்காக, பழையதை நனவு மனத்தில் எந்நேரமும் தாங்கியிருக்க முடியாது. கூடாது.

சிறு வயதில் படித்த கணித வாய்ப்பாடு, நனவு மனத்தில் நான் உருப்போடுவதில்லை: ஆனால் அது என் கூட இருக்கிறது. எத்தனை கூட இருக்கும்: எத்தனை என்னைவிட்டுச் சென்றிருக்கும் என்பது இடையில், சில சமயங்களில், பிரச்சினைதான்.

நேற்று நான் பார்த்த பறவை, இன்று புதியதாகி விடவில்லை.

ஆனால் இன்று வேறொரு மனநிலையில் அதே பறவை என் ரசனைக்கு உரியது. ஒன்று கவனிக்கத்தக்க உண்மை: மனிதன் காலத்தோடு வாழ்கிறான்: பறவை விலங்குகளுக்கு அது இல்லை.

மனிதன் மனிதனாக இருப்பதோடு இதுவும் சம்பந்தப்பட்ட அம்சம்தான். நேற்றுப்போல நான் இன்றிருக்கக்கூடாது என்பதில் காலம் எனக்குள் வருகிறது.

ஜே.கே. கூறுவது முற்றிலும் தவறா? இல்லை ஒரு Silence: நிசப்தம் சாந்த நிலை நோக்கி இயங்குவதில் கவனமாக இருக்கிறார் இவர். காலத்தை அழிக்க இதுவும் ஒரு முயற்சி.

அழிக்க முயற்சி என்பது கூட ஜே.கே.வுக்கு ஒத்துக்கொள்ளாது. தானே அழிய வேண்டும். முயற்சி, மீண்டும் முடிச்சுக்களையே உண்டாக்கும்.

# 08

## பயம் – தப்பியோடுதல்

**ஜெ.கிருஷ்ணமூர்த்தி:**

வாழ்க்கை என்னும் மாபெரும் போராட்டத்தைத் தீர்க்கத் திறமற்றநிலையில்தான் வாழ்க்கையைக் கண்டு பயந்து சாகின்றோம். பயத்தில்தான் இதிலிருந்து தப்பியோடுவதற்கு ஒவ்வொரு வழியையும் தேடுகிறோம். நாமாக வாழ்க்கையை அறிந்து கொள்ளாததால், யாரோ மகான், காப்பாளர், பிராய்டு, யங் நான், உள்பட யாரிடமாவது அறிந்து கொள்வதைத் தவிர நாமாக அறிந்து கொள்ளாததால் நாம் பயந்து சாகின்றோம். நமக்குத் தெரிந்ததைக் கண்டே – நமது பாலுறவின்பங்கள் – இவற்றைக் கண்டே பயப்படுகிறோம்.... நமக்குத் தெரியாதது பற்றியும் பயப்படுகிறோம். சாவுக்காக, நாளைக்கழித்து நமக்கு என்ன நேரும் என்பதற்காகப் பயப்படுகிறோம்.... தத்துவத்தின் வகை ஒவ்வொன்றும், இறையியல் கோட்பாடு ஒவ்வொன்றும் இதனைச்சந்திக்க வேண்டுமானால் ஒருவர் அறவே அச்சம் தவிர்த்தவராக இருக்க வேண்டும். காரணம், இதனைச் சந்திப்பதே இதைக்கூர்ந்து கவனித்தல் மட்டுமல்ல – காலத்தைப் பற்றிக் கவனிப்பதுமாகிறது.

**ஞானி:**

வாழ்க்கையைப் புரிந்து கொள்ள இயலாத நிலையிலும், வாழ்க்கைப் பிரச்சினையைத் தீர்க்கத்திறன் பெறாத போதும் வாழ்க்கையில் அச்சம் மிகுந்திருக்கிறது.

வாழ்க்கையை நாம் புரிந்துகொண்ட வகையில் மகான்கள் முதலியவரின் பேச்சில், எழுத்துகளில் உண்மையைத் தேடுகிறோம்.

பாலுறவு, பெரிய பிரச்சினை: இது அச்சம் தருவது வியப்பில்லை. எதிர் காலத்துக்கான அச்சமும் நியாயமானது.

எவ்வளவுதான் பிறர் இதைப் பற்றிக் கூறிய போதிலும் சம்பந்தப்பட்டவர் இதில் தானே சிந்திக்க செயல்பட வேண்டியது மிகுதியும் இருக்கிறது.

சிந்திக்கத் திறமற்றவர்கள் பிராய்டு, யங், அது போலவே ஜே.கே.வையும் அப்படியே ஏற்றுத் துதி பாடுவதில் ஆச்சரியமில்லை.

தானே சிந்தித்தலும், தான் செயல்படுவதும்தான், இவற்றை நேரில் சந்தித்தல்.

இதற்கு அறவே அச்சம் கூடாது. தானே சிந்திக்காதவர் பிராய்டு முதலியவர்களிடம் முற்றாகச் சரணடைந்து விட்ட நிலையில் அது தப்பியோடுதல்தான். இவர்கள் தன்னைக் காண அச்சம் கொள்பவர்கள்தான்.

ஜே.கே. கருத்துகளில் இவை இம்மாதிரிப் புரிதல் மிகவும் சரி.

2. ஜே.கே.வின் இப் பிரச்சினையை அணுகும் முறை வித்தியாசமானது.

தன்னுடைய நோயைத் தானே கண்டறிய, குணப்படுத்த முடியாது: அதற்காக மருத்துவரை நாடுகிறோம்.

நமது ரேடியோவை நாமே பழுது பார்க்கமுடியாது. காரணம் நமக்குத் தெரியாது.

இப்படிச் சொல்லும்போது மருத்துவர் நம் நோயைக் கண்டறிவதில், குணப்படுத்துவதில் கூட, நமது பங்கு இருக்கிறது என்பதை நாம் மறுக்கவில்லை. ஏற்கிறோம்.

இது போலத்தான் –

நம் மனம் நம்மோடுதான் இருக்கிறது என்பதனால் நாம் இதை முற்றாகப் புரிந்துகொள்ள முடியும் என்பதும் உண்மையில்லை.

மனவியல் ஆய்வில் பிராய்டு யங் ஆகியவர்கள் ஆய்வு புறக்கணிக்கக்கூடியதல்ல.

இவை போதாது என்பதும் ஏற்கத் தக்கதே.

3. ஜே.கே. ஏன் இப்படிக் கூறுகிறார்?

பழையதை, இறந்ததை, ஒதுக்குவதில் ஜே.கே. உறுதியாக இருக்கிறார். தன்னைத் தானே எதிர்கொள்ளலுக்கே முதன்மை, முழுமை தருவது இவர் கொள்கை.

இதனால் மட்டும், தன்னையறிதலோ, தன் பிரச்சினைக்குத் தீர்வோ சாத்தியமில்லை.

பிராய்டு முதலியவர்களின் கோட்பாடுகளில் இறையியல் முதலிய கோட்பாடுகளில் உண்மை சிறிய அளவிலோ பெரிய அளவிலோ இருக்கிறது.

ஜே.கே.வைத் தேடித் தம்மைக் குணப்படுத்திக்கொள்ள வருபவர்களுக்கு இவர் செய்யும் மருத்துவம், அவர் தம் பங்கைத் தூண்டுவதுதான்.

உடனுக்குடன் இது பலன் தருவதும் உண்மைதான். தன் பங்கை மட்டும் உணர்ந்த நிலையில் நோய் சற்றுத்தணியும்.

பின்னர் இது மீண்டும் பற்றிக்கொள்ளும். காரணம், தனது நோய்க்கான காரணங்கள், தன்னோடு மட்டுமே இல்லை. சமுதாய அளவில் வரலாற்றில் அவை இருக்கின்றன. அவற்றைத் தேடிச் செல்ல பழையவற்றுக்குள் செல்ல வேண்டும். இடையில் கோட்பாடுகள் வந்துவிடும். தவிர்க்க முடியாது.

பிரச்சினைகள் தீர அரசியல் முதலிய துறைகளில் செயல்பட வேண்டும். ஜே.கே.வுக்கு இது உடன்பாடில்லை.

பழையவற்றுக்குள் சென்ற போதிலும், எப்போதும் எந்நிலையிலும் தன்னிலை தவறாது இருக்க வேண்டும். அதாவது 'எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும்' என்ற தன்னிலை.

இதுதான் ஜே.கே.வின் களம். இது சிறு புள்ளிதான்: ஆனாலும் கனமான முக்கியத்துவம் நிறைந்த புள்ளி இது.

பழைய தத்துவங்களை இவர் மறுத்த போதிலும், தனக்கு ஒரு தத்துவத்தை இவர் வகுப்பதை ஏற்காத போதிலும், தத்துவப் போக்கில், இந்தப் புள்ளி இந்த நோக்குநிலை – முக்கியமானது.

# 09

## உண்மையான சமயம்

**ஜெ.கிருஷ்ணமூர்த்தி:**

சமயம் என்பது நன்மையாகிய உணர்வு. ஆறுபோல, உயிரோட்டத்துடன், எப்போதும் இயங்கிக்கொண்டிருக்கிற அன்பாகிய உணர்வு – அந்த நிலையில், இனிமேலும் தேடுதல் இல்லாத ஒரு வேளை வருவதை நீங்கள் காணலம். தேடுதல் முடிவுக்கு வரும் இந்நிலை, முற்றிலும் வேறுபட்ட ஒன்றின் தொடக்கமாகிறது. கடவுளை, உண்மையைத் தேடுதல், முற்றிலும் நன்மையான உணர்வு – நன்மை, பணிவு பற்றிய பயிற்சியல்ல. மனத்தின் கண்டுபிடிப்புகள் தந்திரங்களுக்கு அப்பால் ஏதோ ஒன்றைத் தேடுதல், அதாவது, அந்த ஒன்றைப் பற்றிய உணர்வு, அதில் வாழுதல் அதுவாதல் அதுதான் உண்மையான சமயம். நீங்கள் உங்களுக்காகத் தோண்டிக் கொண்ட அந்தச் சிறு குளத்தை விட்டு, வாழ்க்கையாற்றில் கலந்து கொள்ளும் போதுதான் நீங்கள் அதைச் செய்ய முடியும். அப்போது, வாழ்க்கை உங்களைத் தானே கவனித்துக்கொள்ளுகிற விந்தை நெறியாகி விடும்: காரணம், நீங்கள் உங்கள் சார்பில் கவலைப்படுவதில்லை. வாழ்வின் பகுதியாக நீங்கள் இருப்பதால், வாழ்க்கை தன் போக்கில் உங்களை இழுத்துச் செல்லும். அப்போது பாதுகாப்பு பற்றிய பிரச்சினையோ, மற்றவர் என்ன சொல்வார்கள் அல்லது சொல்லமாட்டார்கள் என்ற பிரச்சினையோ இல்லை. அதுதான் வாழ்க்கைக்கு அழகு.

ப.145 P.K.R

**ஞானி:**

தேடுதல் ஒழிந்த பிறகு, சிலவற்றைத் தேடிக் கொண்ட பிறகு, தேட்டம் இல்லாத – தேட்டம் வேண்டாத ஒருநிலை.

இந்த நிலை ஒரு சாந்தநிலை. இதை நிர்வாண நிலை, சூனியநிலை, சாந்தநிலை என்று கூறுவது பொருந்தும்.

யாரிடத்தும் கோபம் இல்லாத, அசைவு இல்லாத, அன்பு மயமான நிலைதான்.

இந்த மனநிலையில் எதனது உறுத்தலும் இல்லை. மனமும் நாமும் ஒருமைப்பட்ட நிலை. அதுவாகிய நிலை.

இந்த நிலை, உலகியல் நிலைமைகளில் அடிக்கடி சிதறும்: மீண்டும் தேட்டம் உண்மையான தேட்டம். சில உண்மைகள் பெறுதல் மீண்டும் ஒரு சாந்தநிலை. இந்த நிலையைப் பெற்றவர் முதலில் இதில் பயின்று நாளடைவில் இதில் இயல்பாக நிலைக்கப்பெற்றவர்க்கு வாழ்க்கை பற்றிய அச்சம் தேவையில்லை. இவர்களுக்கு வாழ்க்கை தேக்கம் இல்லை: வாழ்க்கை நீரோட்டமாகி விடுகிறது.

வாழ்க்கையை இவர்கள் கவனிக்க வேண்டாம், வாழ்க்கை இவர்களை கவனித்துக்கொள்ளும்.

இன்றைய உலகில், இது தற்காலிக நிலைதான். ஆனாலும் இது ஓர் இலட்சியநிலை; அடிக்கடி பெறக்கூடிய, பெற வேண்டிய நிலைதான் இது. பிரச்னைகளுக்கு நடுவில் வாழும் மனிதனுக்கு இந்தச் சாந்தநிலை மிகுதியும் தேவை.

வெற்றியையும், தோல்வியையும் சமமாக மதிக்கும் நிலை; இன்ப துன்பங்களை சமமாக ஏற்கும் நிலை.

இது உன்னதநிலை என்பதால் இது ஏதும் அற்றது போல இருந்தாலும் இது நிறைவு நிலை.

போர் நடுவில் கூட இந்த நிலை பெறாதவன் நிற்க முடியாது.

"கடமையைச் செய்; பலனை எதிர்பாராதே" என்பதும் இதுதான்.

பலன், பெருமையாக, பணமாக மாறும் போது இதை அதிகம் வற்புறுத்த வேண்டி வருகிறது.

இதை இன்னொரு வகையிலும் விளக்கலாம். குறிப்பிட்ட பிரச்சினைகளிலிருந்து, பொது வயப்படுத்தும் போது பொதுவயப்படுத்திய போது ஏற்படும் மனநிலை இது.

ஒன்றை, அதன் சூழலில், உலகச் சூழலில் வைத்துப் புரிந்துகொள்ளும் போது இருக்கும் மனநிலை.

தேங்கிவிட்டது போன்ற, தனித்து விட்டது போன்ற ஒன்றை இயக்கத்தில் வைத்துப் புரிந்துகொண்ட நிலை – இந்தப்போக்கு, தேட்டம் முடிவு மட்டுமல்ல. இந்தப் போக்கில் இயங்குதலும், சாந்தம்.

பிரச்சினைகளைப் புரிந்துகொள்வதில் மட்டுமல்ல, தீர்விலும் ஏற்படும் மனநிலை இது.

தீவிரமான செயல்களில் ஈடுபடுபவனுக்கு வேண்டிய ஒரு மனநிலை இது. இதைத் தத்துவ நோக்கு, தத்துவ மனநிலை என்றும் கூறலாம்.

இந்தச் சாந்த நிலை, எல்லா மனிதர்க்குமே அவ்வப்போது வாய்க்கும் மனநிலைதான். இது இல்லாவிட்டால், மனிதர் காட்டு மிராண்டியாக, பைத்தியக்காரனாகத்தான் இருக்க முடியும்.

இதைச் சமயம் கண்டு பெயர்கூறிப் போற்றி, வளர்த்தது என்பது சமயத்திற்குப் பெருமைதான்.

# 10

# கல்வி – தன்னறிவு

**ஜெ. கிருஷ்ணமூர்த்தி:**

கல்வியின் நோக்கம், சிறுவயதிலிருந்து யாரையும் பின்பற்றாமல் நீங்கள் இருப்பதற்கு உதவி செய்தலாகும். எல்லாச் சமயத்திலும் நீங்கள் நீங்களாகவே இருப்பதற்கு உதவி செய்தல் – இது மிகச் சிரமமான செயல்தான். நீங்கள் அசிங்கமாக இருந்தாலும் நீங்கள் பொறாமைப்பட்டாலும், எப்போதும் நீங்கள் நீங்களாகவே இருப்பதற்கு – ஆனால் இதைப் புரிந்துகொள்வதற்கு உதவுதலாகும். நீங்கள் நீங்களாகவே இருப்பது, சிரமமானது. காரணம், நீங்கள் கேவலமானவராக இருக்கிறீர்கள் என்றும், நீங்கள் பெருமைக்குரியவராக மாற முடியுமானால் எவ்வளவு உன்னதமாக இருக்கும் என்றும் நீங்கள் கருதுகிறீர்கள். ஆனால் அப்படி எப்போதும் நிகழ்வதில்லை. இதற்கு மாறாக, உங்கள் உண்மைநிலை என்ன என்று பார்த்து, புரிந்து கொள்வீரானால், அந்தப் புரிதலிலேயே, மாற்றம் நிகழ்கிறது. ஆகவே, சுதந்திரம் என்பது, ஏதோ வேறுவகையாக ஆவதற்கு முயற்சி செய்வதில் இல்லை. ஏதாவது செய்ய வேண்டும் என்று உணர்வதிலும், செய்வதிலும் இல்லை. மரபின் அதிகாரத்திற்குத் தலை வணங்குவதில், பெற்றோர், ஆசிரியரைப் பின்பற்றுவதில் இல்லை. கணத்திற்குக் கணம் நீங்கள் எப்படி இருக்கிறீர்கள் என்பதைப் புரிந்து கொள்வதில்தான் இருக்கிறது.

ப. 114 PKR

**ஞானி:**

பொறாமைக் குணம் என்னை என் கண்களை மறைத்து விடும் போது, எனது பொறாமைக் குணம் எனக்குத் தெரிவதில்லை. நான் பொறாமைப்படுகிறேன் என்பதைப்புரிந்து கொள்ளும் போதே, என்னிலிருந்து பொறாமைக்குணத்தை வேறுபடுத்தி அறிந்து கொள்கிறேன். என்னிடமுள்ள பொறாமையிலிருந்து விலகுவதற்கு, இது முதற்படி, இந்த முதற்படியில் கால் வைத்துவிட்டால், நிச்சயம் அடுத்தபடிக்குச் செல்லாமல் இருக்க மாட்டேன்.

பொறாமைக் குணத்தை மறைத்துக்கொள்வது என்பது இன்னொரு வகை. தெரிந்தே மறைத்துக்கொள்வதில், அது பலப்படுகிறது. வெளிப்படும் போதும், அது பலப்படும்போதும் நான் கெடுகிறேன்.

மறைத்துக்கொள்வது என்பது, நான் எனது உண்மை வெளித்தோன்றாமல் இருப்பதற்குச் செய்யும் முயற்சி, இந்தப் பெருமை எனக்கு கனக்கவே செய்யும்.

இதில் எனக்குச் சுதந்திரம் இல்லை. சுதந்திரம் அற்ற நிலையில் பெற்றோர்க்கும் ஆசிரியர்க்கும் பணிந்தவன் போல நல்லவன் போல நடிக்கும் அடிமைப்பண்பே வளர்கிறது.

நிச்சயம், இத்தகைய சிந்தனை, கல்வியின் நோக்கத்தைத் தெளிவுப்படுத்துகிறது.

## நிதர்சனம்

**ஜெ. கிருஷ்ணமூர்த்தி:**

நிதர்சனத்தில் இருப்பது என்றால் என்ன? இதன் பொருள், பொருள்களின் பால் ஒரு மென்மை உணர்வு கொள்ளுதல்: ஒரு விலங்குபடும் துன்பத்தை உணர்ந்து அதற்கு ஏதாவது செய்தல், வெறுங்காலுடன்பலரும் நடந்து செல்லும் வழியில் உள்ள ஒரு கல்லை எடுத்தெறிதல்: வழியில் வரும் ஒருவனுடைய கார் பழுதுபடக்கூடாதென்று, வழியில் கிடக்கும் ஓர் ஆணியை அகற்றுதல்: நிதர்சனத்தில் இருப்பது என்பது, மனிதர்கள், பறவைகள், மலர்கள், மரங்களுக்காக உணர்வு கொள்ளுதல்: காரணம் அவை உங்களுடையவை என்பதினால் அல்ல: பொருட்களின் பேரழகில் நீங்கள் நிதர்சனம் கொள்கிறீர்கள் என்பதனால்தான்.

இந்த உணர்வை எப்படி வருவித்துக்கொள்வது? பொருள் பற்றிய ஆழ்ந்த நிதர்சனத்தில், நீங்கள் இயல்பாகவே மலர்களைப் பறிப்பதில்லை. பொருட்களை அழிக்கக்கூடாது. மனிதர்களுக்குத் துன்பம் செய்யக்கூடாது என்ற இயல்பாக ஓர் ஆவல் எழுகிறது. இதன் பொருள், அவற்றிடம் உண்மையான மரியாதை, அன்பு கொள்வதாகிறது. அன்பு செய்தல்தான் வாழ்க்கையில் மிக முக்கியமானது.

ப. 153 - 154 PKR

**ஞானி:**

ஜே.கே.வின் கருத்தோட்டங்களில் நிதர்சனம் என்பது முக்கியமானது. நிதர்சனம் என்பது Sensibility: Awareness என்று குறிப்பிடப்படுகிறது. புறத்திலுள்ள பொருட்கள், நிகழ்ச்சிகளில் மனதைத் தோயவிடுதல் என்று இதனைக் கூறலாம்.

புற நிகழ்வுகளால் பாதிக்கப்படாமல், புறநிகழ்வுகளை மனம் திறந்து வைத்துப் பார்த்து அவற்றில் மனதைத் தோய விடுதல் இது. தன் உணர்வுகளையும் இப்படிப் பார்த்தல்.

இது மென்மையான உணர்வு. மனதில் அன்பை எழுப்பும் உணர்வு. இதை சிந்தனை என்றோ, அனுபவம் என்றோ ஜே.கே. கூறமாட்டார். இந்த மென்மையான உணர்வு நம்மிடத்தில் அலைபோலச் சிறு சிறு செயல்களை எழுப்புகிறது. விலங்குகளுக்குச் செய்யும் சிறு உதவி, ஆணியை அகற்றுதல், மலர்களைப் பறிக்காமை – இப்படியாக, விலங்குகள், பறவைகளிடமும், மனிதர்களிடமும் ஒரு மரியாதை அன்பு. முற்றிலும் நிகழ்காலத்தில், காலமற்றநிலையில் நிகழ்வது இது என்பது ஜே.கே.வின் கருத்து. புறப்பொருள்களுடன் தான் கலந்திருத்தல், புறப்பொருட்களாகி விடாதநிலை. இது ஒரு பரவசநிலை. புறப்பொருட்களின் அழகைக்காணும் மனநிலை.

இது எவ்வளவு மென்மையான உணர்வாக இருந்த போதிலும் இதனுள் சிந்தனை இழையோடுகிறது. இதற்குள் அனுபவம் இருக்கிறது. கண்களைத் திறந்து வைத்தல் மட்டும் இல்லை. இதனோடு மனம் இயங்குகிறது. பார்ப்பதைப் புரிதலோடு மட்டும் மனம் இல்லை. பார்ப்பது, என்னவென்று நினைவிலிருந்து சொற்கள் வந்து சேர்கின்றது, செயலும் கூட இணைகின்றது. இனிமேல் வரும் கார் பழுதுபடக்கூடாது என்ற நினைவும் சிந்தனையும் இணைகிறது. பழுதுபடுவது என்ற அனுபவம் இடையில் வருகிறது. அதாவது இத்தனையும் சேர்ந்துதான் நிதர்சனம், பார்வையும் பொருள், படுத்தலும், உதவி செய்தலும், மிகக் குறைந்ததேயானாலும் கால இடைவெளியில் காலத்தில் நிகழ்கின்றன. இவ்வகை விளக்கம் ஜே.கே.வின் கருத்துக்கு மாறானதுதான். ஆனால் இதுதான் உண்மை.

மலர்களுக்கே மரியாதை தேவை என்றால், மனிதர்களுக்கும் மரியாதை தேவை. கார்பழுதாகக் கூடாது என்பது போல, மனிதர்களும் நோய்களால் வறுமையால், கல்வியின்மை முதலிய குறைகளால் பாதிக்கப்படக்கூடாது. ஆணியை எடுத்தெறிவது போல, தடைகளை நீக்க வேண்டும். என்ன தடைகள்? எப்படிக் களைவது? தவிர்க்க இயலாமல் விரிவான சிந்தனை, சிந்தாந்தங்கள், கட்சிகள், நடவடிக்கைகள், தேவையானால் வன்முறை, இப்படி வந்து விடுகின்றன.

மரியாதை, மரியாதைக் குறைவு இப்படியெல்லாம் வந்து விடுகின்றன. மலர்களிடம் மரியாதை காட்டுபவர், ஆணியை எடுத்தெறிபவர், தவிர்க்க இயலாமல் இவற்றில் ஈடுபட வேண்டிய வராகிறார். மென்மையான உணர்வுகளோடு இருப்பவர், கடுமையான, தீவிரமான உணர்வுகளையும் கொள்ள வேண்டியராகிறார். இந்நிலையில், ஜே.கே.மென்மையான உணர்வுகளிலேயே எப்படி இருந்துவிட முடியும்? மலர்களோடும், விலங்குகளோடும், ஆணிகளோடும் – இவற்றோடு மட்டும் இருந்துவிட முடிகிறதா?

எல்லா நடைமுறைளினுள்ளும் மென்மையை இழந்துவிட வேண்டாம் என்பது நல்லது. ஜே.கே.இதைத்தான் பிரதிபலிக்கிறார். ஒரு மலரை அணிந்து கொண்டு, போர்க்களம் செல்வது போல.

# 12

## தேடல்

**ஜெ. கிருஷ்ணமூர்த்தி:**

வழிபடுபவனே வழிபடப்படுகிறான். இன்னொருவரை வழிபடுவது என்பது தன்னைத்தானே வழிபடுதல்தான். படிமம், குறியீடு என்பது தன்னைத் தானே வெளிப்படுத்திக்கொள்ளும் உருவம்தான். உனது விக்கிரகம், உனது வேதம், உனது வழிபாடு, உன்னுடைய பின்னணியின் பிரதிபலிப்புத்தான். இன்னொருவரால் அது செய்யப்பட்ட போதிலும் அது உனது படைப்புத்தான். உனது திருப்திக் கேற்றதையே நீ தேர்ந்தெடுக்கிறாய். உனது தேர்வு, உனது விருப்பு வெறுப்புக் குகந்ததுதான், உனது படிமம் உனது போதைக்கானதுதான். உனது நினைவிலிருந்தே அது செதுக்கப்படுகிறது. உனது சிந்தனையால் படைக்கப்பட்ட படிமத்தின் வழியே உன்னைத்தான் நீ வழிபடுகிறாய். உனது மனத்தின் மந்திரத்தால் போர்த்தப்பட்ட உன் மீது நீ கொண்ட அன்பைத்தான் நீ பக்தி என்று கூறுகிறாய், படம் நீ தான். உனது மனத்தின் பிரதிபலிப்புத்தான். அத்தகைய பக்தி, தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்வதின் ஒரு வடிவமே. இது வேதனைக்கும், தனிமைப் படலுக்கும் இதுதான் சாவுக்கும் வழிவகுக்கிறது.

இந்தத் தேடல் பக்தியா? ஏதாவது ஒன்றைத் தேடுதல், தேடுதலாகாது. உண்மையைத் தேடுதல் அதை அடைவதாகாது. தேடலின் மூலம் நம்மிலிருந்து தப்பிச் செல்கிறோம் இது மாயைதான். நாம் எப்படி இருக்கிறோமோ அதிலிருந்து ஒவ்வொரு வழியிலும் நாம் ஓடவே முயல்கிறோம். நமக்குள் நாம் சிறுத்து – சாரத்தில் வெறுமையாக இருக்கிறோம். நம்மை விடப் பெரியதைத் தொழுதல், நம்மைப் போலவே சிறியதாக, அறிவற்றதாக இருக்கிறது. பெரியதுடன் நம்மை இணைத்துக் கொள்வது, சிறியதன் வெளிப்படுத்தல்தான். குறைவின் நீட்சிதான் மிகுதி. பெரியதைத் தேடிச் செல்லும் சிறியது. தன்னால் கண்டறியக் கூடியதையே பெற முடியும். தப்புதல்கள், பலவகை தப்பியோடும் மனம், அச்சம் உடையது. குறுகியது. அறிவற்றது.

ப. 40 CL II

**ஞானி:**

கடவுள், விக்கிரகம், பக்தி ஆகியவை பற்றிய ஜே.கே.வின் கூர்மையான அற்புதமான விமர்சனம் இது. தான் படைத்த கடவுளுக்குள், தான் வணங்கும் விக்கிரகத்திற்குள், தனது வழிபாட்டு முறைகளுக்குள்தான் 'தான்' இருக்கிறான். தன்னைப் போலவே, அதுவும் சிறியது குறைவுடையது. இது மனிதனைக் காப்பாற்ற முடியாது. மனிதனை மேலும் இது சிறியதாக்கும். வறியதாக்கும். தன்னை இழந்து மனிதன் தன்னைப்பெற முடியாது. பெரியதாக்க முடியாது. போதையை எழுப்பி, அறிவைப் பெற முடியாது. உன் சிந்தனைதான் அதைப் படைத்தது. அது உன்னைக் காப்பாற்ற முடியாது. இத்தகைய கூர்மையான விமர்சனமும் சிந்தனை ரீதியாகச் செய்யப்படுவதுதான் பக்தி,

கடவுள், உருவம் ஆகியவற்றைத் தகர்க்க இங்கு சிந்தனைக் கூர்மையான கருவியாகச் செயல்படுகிறது. ஜே.கே.வின் வழியிலேயே சிந்தனை தவிர்க்கப்படக் கூடியதல்ல.

தன்னைத் தந்து மனிதன் கடவுளை, உருவத்தைப் படைக்கிறான். தன்னை இழந்து தன்னை விட பெரியதைப் படைக்கிறான். தன்னிலிருந்து தப்பி ஓடுவதற்காக – தன்னைக் கற்பனையில் நிறைத்துக் கொள்வதற்காகப் படைக்கிறான். மனிதன் தான் இழந்தவை அறிவு, ஆற்றல், அன்பு, அழகு முதலியவை. இவை புறஉலகில் மனிதன் இழந்து தான், அக உலகில் பக்தியை நிறைத்தான். இந்த அக உலகம்தான், கடவுள், உருவம், வழிபாடாக விரிந்தது.

மனிதன் தன்னை மீண்டும் பெறுதற்கும் புற உலகத்தை மீட்டுக்கொள்ள வேண்டும். புற உலக மீட்சி, சிந்தனை ரீதியாகச் செய்யப்படுவது அல்ல. செயல்வடிவில் செய்ய வேண்டியது. சிந்தனை முறையில் செய்வதில் பக்தி முறை போலத்தான் ஜே.கே.வின் முறையும். புற உலக மீட்சிக்கான செயல்வடிவத்தில் ஒன்று அரசியல். இது ஜே.கே.வுக்கு உடன்பாடில்லை. ஜே.கே.வின் வழி கடவுள், உருவ வழிபாட்டை விட்ட பிறகு தன்னைத் தானே சந்தித்தல், புற உலகைப் பெறுவது ஜே.கே.வுக்கு உகந்தது அல்ல. ஆட்சி முதலியவை தீயவை.

இப்பிரச்சினையில் இன்னொரு கோணமும் இருக்கிறது. கடவுள் மனிதனுடைய படைப்பு என்ற வகையில் எப்போதும் அவனை விட சிறியதுதான். கடவுளைப் படைத்தவன், தேவைப்பட்டால், அதன் இலக்கணத்தை, உருவத்தை, தனது தேவைக்கும் காலத்துக்கும் ஏற்றவாறு மாற்றியும் அழித்தும் வருகிறான் மனிதன். ஆகவேதான் அதன்கீழ் சரணடைந்து மனிதன் இருந்திருக்கிறான். தனக்குள்ளிருந்து, தனது இலட்சியங்கள், அழகு பற்றிய தனது கற்பனைகள் முதலியவைற்றைக் கடவுள் என்று புறப்பொருளாக்கி, அதற்குள் தன்னைப் பிரதி செய்ததோடு, தனக்கு இலட்சியமும் ஆக்கினான் மனிதன். அண்டங்களைக்கூடத் தனது பார்வையில், அடக்கும் அந்தக்கடவுளின் பார்வையில் உலக நிகழ்ச்சிகள், மனிதர் வாழ்க்கை தன் வாழ்க்கை முதலியவற்றை மனிதன் பார்த்தான்.

இவ்வகையில் கடவுள், இவனுக்கு ஒரு மிக விரிந்த நோக்கு நிலை. இந்த வகையிலும் மனிதன் கடவுளுக்குள் தன்னைப்பிரதி செய்து கொண்டதும் இருக்கிறது. தன்னைத்தானே பிரதி செய்துவிட்டு, ஒரு நிலையில் தன்னையே அதுவாகக் கண்டு அதை வணங்காமலும் இருந்திருக்கிறான் மனிதன். இந்த மனிதன், தான் என்று மட்டும் கூறக்கூடிய தனிமனிதன் அல்லன். இவன் வரலாற்றில் வரும் சமுதாய மனிதன். இந்த வகையில் பார்த்தால், கடவுளோ, மனிதனோ இகழத்தக்கவர், முற்றாக ஒதுக்கத் தக்கவர் அல்லர். ஜே.கே. காலம், வரலாறு ஆகியவற்றை மறுத்த நிலையில் இதைக் காணாத வியப்பில்.

# 13

# அனுபவம் – சுதந்திரம்

**ஜெ. கிருஷ்ணமூர்த்தி:**

நான் 'தனது' சொந்தக் கட்டிலிருந்து, மாயைகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முடியுமா? பெயரற்ற தொன்றாவ தற்காக 'நான்' தன்னை இழந்துவிடக்கூடாதா? இறுதி முடிவை நோக்கிய இடைவிடாத முயற்சி, தனது 'நானை' மேலும் பலப்படுத்தவில்லையா? நீ இறுதி முடிவை நோக்கிப் போராடுகிறாய், இன்னொருவர், உலகியற் பொருள்களைத் தொடர்கிறார். அவருடையதை விட தனது முயற்சி சிறந்ததாக இருக்கலாம். ஆனால் இதுவும் ஒன்றைப் பெறுவது கருதித்தானே.

அனுபவிப்பவர் தனது அனுபவத்தால் கட்டுப்படுத்துகிறார். அனுபவிப்பவர்தான் அனுபவிப்பதாக உணர்வாரானால், அப்போது அவர் அனுபவம், தானே படைத்து வெளிப்படுத்திய ஆசைகளின் விளைவுதான். நீ கடவுளை அனுபவிப்பதாக அறிந்தால், அப்போது கடவுள் என்பது, உனது நம்பிக்கைகள் மாயைகளின் வெளிப்படுத்தல்தான். அனுபவிப்பவர்க்குச் சுதந்திரம் இல்லை. அவர் தன் அனுபவங்களுக்குள்ளேயே எப்போதும் சிக்கிக்கொண்டவர். காலத்தைப் படைப்பவரும் அவரே. நிலைபெற்றதை அவர் என்றும் அனுபவிக்க முடியாது.

நீ முற்றிலும் நிர்வாணியாக, பழைமையின் கனமோ, நம்பிக்கையான எதிர்காலத்தின் கவர்ச்சியோ இல்லாமல் இருக்க வேண்டும்.

ப. 114 C, L - II

**ஞானி:**

மதவாதிகள், ஓயாமல், கடவுளுக்குப் பூஜை செய்வது போலவே தியான நிலையில் ஈடுபடுகின்றனர். நாளடைவில் இந்தப் பயிற்சியில் அவர்கள் மாட்டிக்கொண்டு விடுகிறார்கள். ஒரு சமயம் அல்லது சில சமயங்களில் கண்ட இன்பத்தையே எப்போதும், எல்லாச் சமயங்களிலும் பெற வேண்டும் என்பதற்காக இவ்வாறு ஒரே அனுபவத்திற்குள் மாட்டிக் கொள்கிறார்கள். இறைவனை அடைதல் என்ற இறுதி நோக்கை அடைவதாகவோ, ஆன்மாவின் தொல்லையறுவதற்காக என்று இதற்குக் காரணம் கூறிக்கொள்கிறார்கள். இந்தச் சடங்கு முறைகள் தத்துவ முயற்சிகள் அல்ல. இவை மதச்சடங்கு முறைகள், பொருளைத் தேடுவதில் சிலர் காட்டும் அக்கறை போலத்தான் இவர்கள் முயற்சிகளும் இந்த அனுபவம் இவர்களே படைத்துக்கொண்ட அனுபவம்: இது இவர்களைக் கட்டுப்படுத்துகிறது. இவர்களின் அனுபவங்களுக்கு நாயகனாக இருப்பது, இவர்களின் சுயநல சுய இன்பவிருப்பத்தோடு கூடிய 'நான்' தான். இம்முறையில் இவர்கள் காலத்தில் நீட்டிக்கிறார்கள். காலத்தைக் கனமாக்கி விடுகிறார்கள். அதாவது இவர்களுக்குக் காலம் தேவை: நீண்ட காலங்கள் தேவை. இவர்கள்

தம்மைத்தாமே வழிபடுபவர்கள். இந்தியச் சமயவாதிகள் – அவர்கள் அத்வைதிகளாகவோ, புத்தமத வாதிகளாகவோ இருக்கலாம். அவர்களைப் பற்றிய ஜே.கே.வின் கூர்மையான விமர்சனம் இது. அனுபவங்கள் நினைவிலிருந்து திரும்பத்திரும்பத் தன்னைப் பெறுவதற்காக ஒருவனைத் தூண்டுகின்றன. இவ்வகையில் அனுபவமும் நினைவும் நம்பிக்கையும் ஜே.கே.வால் பாராட்டப்படுவதில்லை. இத்தகைய அனுபவங்களையும் துறந்துவிட்டு முற்றிலும் நிகழ்காலத்தில் இருப்பது தேவை என்கிறார் ஜே.கே.

மதவாதிகளின் சடங்கு முறையான பூசைகளை ஒதுக்கிவிடுவோம். அவர்களின் தியானமுறை, ஜே.கே.கூறுவது போல முற்றிலும் இப்படிப்பட்டதுதானா?

புற உலகில் பழகும் போது ஏற்படும் போட்டிகள், பெறாமைகள், எரிச்சல்கள், தியானத்தின் போது – மனம் ஓர் உன்னத நிலைப்படும் போது ஒதுங்குவதில்லையா? புறவுலகில் காணும் வேற்றுமைகள் ஏற்றத்தாழ்வுகள், அகவுலகில் நடைபெறும் தியானத்தின் போது, அழிந்து, அவை ஒருமைக்கோலத்தில் தோன்றுவதில்லையா? அல்லது இவை அர்த்தமற்றுச் சூனியமாகி விடுவதில்லையா? தனக்குள் இருக்கும் உன்னதமான இலட்சியம் விழித்துக்கொள்ள, அதன் பார்வையிலிருந்து தனது உலகியல் அனுபவங்கள் மதிப்பிடப்படுவதில்லையா? துண்டு துண்டான பல்வேறு வகை விபரங்களும் அவற்றின் சேர்க்கையாகியதொகுப்பைக் கடந்து புதியதொரு பேருண்மையில் தியான நிலையில் இணைவதில்லையா? இலக்கியம், கலை முதலிய படைப்புகள் இத்தகையதொரு மனநிலையில் அல்லவா கருக்கொள்கின்றன! நிகழ்காலப் பிரச்சினையின் தீவிரமான உறுத்தல்களிலிருந்து, அவற்றின் வழியே விடுபட்டு, எதிர்கால உலகக் காட்சிக்குள் சுதந்திரமாக உலவிவருவது இத்தகைய தியான நிலையில் அல்லவா! இத்தகைய தியான நிலையை ஜே.கே. எப்படி மறுக்கக்கூடும்?

# 14

## அறிதல்

**ஜெ. கிருஷ்ணமூர்த்தி:**

அறிதல் என்பது அனுபவம் பெறுதல் : அனுபவம் பெறுதல் என்பது அடையாளம் கண்டுகொள்ளுதல், அடையாளம் கண்டுகொள்ளுதல் என்பது நினைவு; தொடர்புபடுத்துதல்: அறிதல் என்பதற்கு நீங்கள் கொள்ளும் பொருள், ஒரு முன்னைய நிகழ்ச்சியின் விளைவு, நினைவுபடுத்துதல், முன்னால் நடைபெற்றது என்றால் நடைபெற்று முடிந்ததைப் பற்றியதே அறிதலாகிறது. எது நடைபெற்றுக் கொண்டிருக்கிறதோ, அதை நீங்கள் அறிய முடிகிறதா? நடைபெற்று முடிந்த மறுகணத்தில்தானே உங்களால் அதை அறிய முடிகிறது. உண்மையில் நடைபெற்றுக்கொண்டிருப்பது காலத்துக்கு வெளியில் நடைபெறுகிறது. அறிதல் எப்போதும் காலத்தில் நடைபெறுகிறது. காலத்தின் கண்ணைக் கொண்டுதான் நீங்கள் நிகழ்ச்சியைப் பார்க்கிறீர்கள். காலந்தான் அதற்குப் பெயரிடுகிறது; உருமாற்றுகிறது; பதிவு செய்கிறது. இதுதான் அறிதல் எனப்படுகிறது. இந்த அறிதல் களத்தினுள்ளே மலைக்கு மறுபுறம் உள்ளதை – அல்லது மரத்திற்குப் பின்புறம் உள்ளதைக் கொண்டுவா நீங்கள் விரும்புகிறீர்கள். நீங்கள் அதை அறிந்தாக வேண்டும் என்றும், அனுபவத்திற்குள் கொண்டுவா வேண்டும், அதைப்பிடித்துக்கொள்ள வேண்டும் என்றும் வற்புறுத்துகிறீர்கள், புரண்டோடும் வெள்ளத்தை உங்கள் மனத்தில் அல்லது கையில் பிடிக்க முடியுமா? நீங்கள் பிடித்து வைத்திருப்பது ஒரு சொல், உங்கள் கண்கள் பார்த்து முடிந்ததை இந்தப் பார்வையைச் சொற்களில், அந்தச் சொற்கள் பற்றிய நினைவையே நீங்கள் வைத்திருக்கிறீர்கள்; ஆனால், நினைவு வெள்ளமல்ல; எப்போதும் வெள்ளமும் ஆகாது.

ப. 67 SPKR

**ஞானி:**

வண்டியோடுவதை, அதன் வேகத்தில், நம் சிறுவயதில் அறிய முடியாதிருக்கலாம். ஆனால் பலமுறை கவனித்துப்பார்த்து, நிதானமான வேகத்தில் அதைக்கவனித்து, நாம் பிறகு புரிந்துகொண்டிருக்கிறோம். சைக்கிளின் வேகத்தை, அதன் நிகழ்விலேயே பார்க்க, அறிந்து கொள்ள முடியாதிருக்கலாம். நிறுத்திவைத்து, நிதானமாக ஓடவைத்து, கருவிகளின் இணைப்பைக் கவனித்து நாம் புரிந்துகொள்கிறோம். விமானம், ஜெட்விமானம் ஏவுகணை ஆகியவற்றையும் முதலில் புரிந்து கொள்ளாவிட்டாலும், நாளடைவில் புரிந்துகொள்கிறோம்.

நிகழ்வு கழிந்தபிறகுதான், அதை நினைவில் இருத்திப் பிறகு புரிந்துகொள்கிறோம் என்று கூறும் விமர்சனத்தில் ஆழம் இல்லை. காரணம் அப்படி ஒரு முறை புரிந்துகொண்ட அறிவு, மீண்டும் அந்த நிகழ்வு நிகழும்போது உடனுக்குடன், அல்லது நிகழ்வு நடைபெற்ற மறுநிடங்களில் மறுநொடிகளில் புரிந்துகொள்ளப் பயன்படுகிறது. மறுநொடியில் தானே என்பதும் விவேகமான விமர்சனம் இல்லை. நம் எதிரே இருக்கும் ஒரு பொருளை நம்

கண் பார்த்தவுடனே, அப்பொருளை நம் மனம் பெயரிட்டுப்புரிந்துகொள்ள முடியாது. பார்வை நரம்புகள் வழியே ஏற்படும் பதிவு மூளைக்குச் சென்றுதான் அப்பொருள் புரிந்துகொள்ளப்படுகிறது. இதனால் நஷ்டமில்லை.

சில அணுச்சிதைவுகள் கண்பார்வைகளுக்கு அகப்படாமல் கூர்மையான கருவிகளின் பார்வைக்கு அகப்பட்டுவிடுகின்றன. அதாவது புறப்பொருளை – அதன் நிகழ்வை அதே கணத்தில் நாம் புரிந்து கொண்டோமா என்பதை விட நாம் மறுகணத்திலாவது புரிந்துகொண்டது அப்பொருள்தான் என்பது ஒரு உண்மை.

மறுகணத்தில் புரிந்துகொண்டது, அப்பொருளின், நிகழ்வின் முழு உண்மையாக இருக்கவேண்டியதில்லை. உண்மையைப் போன்ற போலித்தோற்றமாக, உண்மையில் அரை குறையாக இருக்கக்கூடாதா என்று கேட்கலாம். இருவர் அல்லது பலர் சண்டை பிடித்துக்கொண்டார்கள் என்றால், அதன் காரணத்தைச் சரிவர அறிந்துகொள்ள நாட்கள் பல பிடிக்கலாம்; மேலும் சரியான உண்மையைப் புரிந்துகொள்ள நூற்றாண்டுகள் கூட ஆகிவிடலாம். மெல்ல மெல்ல உண்மையை நோக்கிச் செல்கிறோம் என்பது ஒரு முக்கியமான உண்மை. இதைத்தவிர நமக்கு வேறு வழியில்லை, மிகப்புதிய உண்மைகளை – மெய்மைகளை நாம் பழைய கோட்பாடுகளைக் கொண்டு தானே புரிந்துகொள்கிறோம்: இது சரியல்லவே என்றும் கூறலாம்.

இது உடனடியான காலத்தில் அப்படித்தான்: நீண்ட கால நோக்கில் உண்மையை நாம் கூடியவரை நெருங்கிச் செல்கிறோம் என்பதுதான் உண்மை. ஆகவே, அறிவு நமக்கு நூற்றுக்கு நூறு சரியான வழிகாட்டி அல்ல என்றாலும், நமக்கு இதைத்தவிர வேறு வழிகாட்டி இல்லை என்பதுதான் உண்மை.

மேலோட்டமான புலப் பதிவுதான் முற்றான உண்மை என்று ஏற்கமுடியாது. புலன்களில் பட்டது இப்படியாக இருக்கிறது என்பதற்கும் காலமும் அறிவும் முன்னைய அனுபவமும் தேவையாக இருக்கிறது. இத்தகைய துணைகளின்றி புலப்பதிவுகூட சாத்தியமில்லை. நொடிக்குநொடி உலகம் மாறுவது கொண்டு நிலையாமையையே – முற்றான நிலையாமை வாதத்தையே முழு உண்மையாக்கிவிட முடியாது. விதை நொடிக்கு நொடி மாறுகிறது என்பதானல் ஒரு விதையின் இயக்கம் முளை, செடி, மரம், பூ, பிஞ்சு, காய், பழம் விதை என்றாவது, கோடி முறையாவது நடைபெற, பிறகுதான் நாம் முன்பு கண்ட விதையில் முற்றான மாற்றம் நடந்து அது வேறுவிதையாகி விட்டிருக்கும். நிலையாமைக்குள் ஒரு நிலைத்தலும் நடைபெறத்தான் செய்கிறது. வாழ்க்கை, ஒரு வெள்ளந்தான்; நீரோட்டம்தான்; இதை மேலும் சரிவரப் புரிந்துகொள்ளப் புரிந்துகொள்ள, நாம் வாழ்க்கையில் வேகம் கொள்கிறோம், வேகத்திற்கேற்பப் புரிந்துகொள்வதிலும் வேகம் கொண்டு.

என்றைக்குமே வேகத்துடன், நம்மால் சரிவர, இணையாக, முற்றிணையாகச் செல்ல முடியாது என்பது உண்மைதான். இது ஒரு உண்மையான பிரச்சினை என்பதை அங்கீகரிப்பது நமது வேகத்தை அதிகரிக்கவே செய்யும். மனிதனுடைய அனுபவமே, அறிவே கனத்துப்போய், நிகழ்காலத்தில் அவனுடைய பார்வையை மறைத்துவிடக்கூடும் என்ற கருத்தில் ஜே.கே. கூறியிருப்பாரானால், அது ஏற்கத்தக்கது. அவ்வாறு கூறுவதற்காக அறிவு, அனுபவத்திற்கு எதிரான ஒரு எதிர்மறைப் பார்வை கொள்வாரானால் அது ஏற்கத்தக்கது இல்லை. 'வாழ்க்கை,வெள்ளம், இதில் உன் அறிவு கனக்கிறது; விட்டுவிடு என்பது தத்துவமாகாது; தத்துவத் துக்கு எதிர்நீச்சல்; ஜே.கே. இதைத்தான் செய்ய முயல்கிறார். வாழ்க்கை வெள்ளத்தில் பயணம் செய்ய தத்துவத்துணை மிகத் தேவை. இதை உதறுவது, ஜே.கே.வின் கருத்து –கரையில் நின்று இரசிப்பது ஜே.கே.வின் நோக்குநிலை.'

# 5

# சிந்தனை – அனுபவம்

**ஜெ. கிருஷ்ணமூர்த்தி:**

சிந்தனை என்பது புலன் உணர்வு, பார்வை; தொடர்புறுதல் மூலம் புலன் உணர்வு ஏற்படுகிறது. இதிலிருந்து ஆசை எழுகிறது, எனது, எனது அல்லாதது என்று சார்புறுத்திக் கூறுதல் இதிலிருந்து எழுகிறது. சிந்தனை என்பது புலன் உணர்வைச் சொல்லாக்குதல்.

சிந்தனை நினைவின் பதில் : சொல்: அனுபவம் : படிவம்: சிந்தனை, மாறுவது, நிலையில்லாதது: இது நிலையுறுதிக்காக முயல்கிறது. ஆகவே சிந்தனை, சிந்தனையாளனை உருவாக்குகிறது. சிந்தனையாளன் நிலைப்படுகிறான். அவனே வழிகாட்டுபவனாக, கட்டுப்படுத்துபவனாக, சிந்தனைக்கு உருவளிப்பவனாகிறான். நிலையில்லாத சிந்தனையின் விளைவுதான். இந்த மாயையான நிலைப்பட்டபொருள், இதுதான் சிந்தனை. இது இல்லாவிட்டால் அவன் இல்லை. சிந்தனையாளன், பல குணங்களின் தொகுதி, அவனிடமிருந்து அவன் குணங்களைப் பிரிக்க முடியாது. கட்டுப்படுத்துபவனே, கட்டுப்படுகிறார்; தன்னை ஏமாற்றிக்கொள்ளும் ஒரு விளையாட்டிலேயே இவன் ஈடுபட்டிருக்கிறான். இது பொய் என்று அறியப்படும் வரை, உண்மை தோன்றுவதில்லை.

அனுபவித்தவன், தன் அனுபவத்தை நினைவில் வைத்திருக்கும் வரை, உண்மை தோன்றுவதில்லை. உண்மை என்பது, நினைவுறுத்தப் படுத்தப்படுவதோ, தொகுத்து வைப்பதோ, பதிவு செய்யப்படுவதோ வெளிப்படுத்தப்படுவதோ அல்ல. தொகுக்கப்படுவது உண்மையில்லை. அனுபவிக்க வேண்டும் என்ற ஆர்வமே அனுபவிப்பவனைத் தோற்றுவிக்கிறது; அவன் மேலும் தொகுக்கிறான். நினைவு வைக்கிறான். சிந்தனையாளனை அவனுடைய, சிந்தனைகளிலிருந்து ஆசை, பிரிக்கிறது. ஆசை பற்றிய நிதர்சனம் தன்னறிவாகிறது. தன்னறிவே தியானத்தின் தொடக்கம் –

ப. 69 CL II

தொகுப்பு என்பது தொடர்வது, அனுபவம், அறிவு, ஆற்றல் பொருட்களைத் தொகுப்பது, அவற்றின் தொடர்ச்சியாகிறது..... தொகுக்கும் மையம், ஆசை, இதுதான் (Self) தான்: இந்த மையத்தின் செயல். தொடர்ந்து இதன் தொடர்ச்சியாகிறது. மனத்தின் இயக்கம் எதுவும்– காலத்தைக் கட்டுப்படுத்துவது; இதுபடைப்பைத் தடுக்கிறது. காலம் அற்றது, நினைவின் தொடர்புடையதன்று. அனுபவமும் அறிவும் முற்றாக அறும்போதுதான். பெயரற்றது தோன்றுகிறது. உண்மைதான் அறிவைத்தன் கட்டிலிருந்து விடுவிக்கிறது.

ப. 108 CL II

**ஞானி:**

சிந்தனையாளனைப் பற்றி ஜே.கே.வின் அருமையான படப்பிடிப்பு இது. மனித சமுதாயத்தின் நெடுங்கால வரலாறு முழுவதும் இப்படித்தான் நேர்ந்திருக்கிறது. கலைஞர்கள். விஞ்ஞானிகள், அரசியல்வாதிகள் முதலிய சிந்தனையாளர்கள் இப்படித்தான் செயல்பட்டிருந்திருக்கிறார்கள்: இப்படித்தான் தொடர்கிறார்கள். தன் சிந்தனைகளை, மரபு முறையில் வரும் சிந்தனைகளை, கல்வி என்ற பெயரில் புத்தகங்களாக, நூலங்களாக இப்படித் தொகுத்து வைக்கிறார்கள். இம்முறை மேலும் கல்வியறிவு டையவரை, சிந்தனையாளரை தோற்றுவிக்கிறது.

பொதுமக்களிலிருந்து பிரித்துப் பார்க்கத்தக்கவாறு சிந்தனா வாதிகளை இது – தோற்றுவிக்கிறது. பல சமயங்களில் சிந்தனை – பழைய சிந்தனைகளின் தொகுதி மனத்தில் கப்பிக்கொள்கிறது. அவை மற்றவர்கள் தலையில் திணித்து வைக்கும் அல்லது விளம்பரப்படுத்தும் முயற்சிகள் நடைபெறுகின்றன. சிந்தனையின் பெருக்கத்திற்கிடையில், நினைவுகள் சுமையாகி, உணர்வுகள் சிறுத்து, மழுங்கி, இறுதியில் அந்தச் சிந்தனைத் தொகுப்பைத் தாங்கியிருப்பவர் 'இதயமற்றவராய்', உணர்ச்சியில்லாதவராய் – புதிய உண்மைகளைப் பெறாதவராய் ஆகிவிடுவதும் உண்டு. தொகுப்பது 'தானாகி' – அதுவே ஆசையாகி, வெறியாகி' 'தன்னை'க் கனக்க வைக்கிறது. இது புதிய படைப்புகளைத் தடுக்கிறது. தானும் செய்வதில்லை. இவ்வளவும் ஜே.கே. கூறுவது போலவே உண்மைதான்.

மனித சமுதாய வரலாறு முழுவதற்கும் இது உண்மைதான். பழைய உண்மைகளைத் தாங்காமல், மீண்டும் படித்துக்கொள்ளாமல், படிப்பித்துக்கொள்ளாமல் மனித சமுதாயத்துக்கு வளர்ச்சியில்லை. பழைய உண்மைகளைத்தான் சமுதாயம் தொடர்ந்து படித்துக் கொண்டிருக்கிறது என்பதுதான் உண்மையானால், மனித சமுதாயத்துக்கு வளர்ச்சியே இருந்திருக்காது. ஆனால், சமுதாயம், வரலாற்றில் பெரிய அளவு வளர்ந்திருக்கிறது. அப்படியானல், புதிய உண்மைகளை, தன் வாழ்க்கை முழுவதும் வழி நெடுகக்கண்டு வளர்ந்துள்ளது. பழைய சிந்தனையின் அழுத்தத்தையும் மீறிய புதிய சிந்தனைகள் பிறந்துள்ளன. புதிய சிந்தனைகளின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்குமே கூட பழைய சிந்தனைகள் உதவியிருக்கின்றன. பழைய சிந்தனைகளுக்கிடையிலுள்ள முரண்பாடுகள் புதிய சிந்தனைகளைத் தோற்றுவித்துள்ளன. விஞ்ஞானம் முதலிய துறைகளுக்கல்லாமல், சமயம், தத்துவம், கலை முதலிய மனிதவியல் துறைகளுக்கும் இது உண்மைதான். தன் பழைமையை, பழைய சிந்தனைகளை உதறிக்கொள்ள வேண்டும் என்ற துடிப்பும்கூட, ஒரு குறிப்பிட்ட சூழலில் பதிய சிந்தனைதான்: புதிய சிந்தனைகளையே தோற்றுவிக்கிறது.

(நாம் முன்பே பார்த்தபடி) நிகழ்வுகளின் வேகத்திலேயே சிந்தனைகள் உருவாவதில்லை என்பது உண்மைதான். இதன் இன்னொரு மறுதலை உண்மை, சமுதாயத்துறையில் – விஞ்ஞானத்துறையில், நிகழ்வுகளைச் சிந்தனை தூண்டுகிறது. நிகழ்வுகளுக்கு வேகம் கொடுக்கிறது. மனிதன் வரலாற்றில் உருவாகிய பின் இது நேர்ந்திருக்கிறது. இயற்கையின் அடிமையாக மனிதன் இருந்த நிலை ஒன்று: இயற்கையை ஏவல் கொள்வது இன்னொன்று,

மனித வரலாறு என்பது, மனிதன் தன்னைத் துறுத்திக்கொண்ட வெளிப்படுத்திக் கொண்ட வரலாறுதான். தன் சூழலின் வழியே, தன்னைக் கட்டுப்படுத்தும் சூழலின் வழியே, ஆணவத்தோடு தவிர்க்க இயலாமல், தொடர்ந்து தன்னை சேகரித்துக்கொண்டு, உடைத்து வெளிப்படுத்திக்

கொண்ட, உருவாக்கிக் கொண்ட வரலாறுதான். இவன் பட்ட துன்பங்கள் இவனுக்குப் பல சமயங்களில் தற்பெருமை, ஆணவத்தைத் தோற்றுவித்ததும் புரிந்துகொள்ளக்கூடியதுதான். சிந்தனை தேவை: ஆனால் சிந்தனையாளன் அதற்குள்ளே கட்டுப்பட்டுவிடக்கூடாது. மற்றவர்களையும் கட்டுப்படுத்தக் கூடாது. சிந்தனையாளன் தன்னை இழந்துவிடக்கூடாது. சிந்தனையே ஒரு கனமாக, தற்பெருமையாக, மாறிவிடக்கூடாது. ஜே.கே.வின் கருத்து இப்படியிருந்தால் ஏற்கக்கூடியது. இப்படியில்லை என்பதால், இப்படி வகுத்துக்கொள்வது நமக்குத் தேவையாகிவிட்டது. சிந்தனையாளர் களின் நடுவில் ஜே.கே. வெளிப்படுத்தும் ஒளி, சிந்தனையாளன் 'தன்னை' இழந்துவிடக்கூடாது. இது ஒரு பேரொளிதான். ஐயமில்லை. இதை வற்புறுத்துவதற்கு ஒருவர் இதில் தீவிர நிலை மேற்கொள்வதும் கூட புரிந்துகொள்ளக் கூடியதுதான்.

# 16

## புதியது – பழையது

**ஜெ.கிருஷ்ணமூர்த்தி:**

சாவு தவிர்க்க இயலாதது. தொடர்வதை முடிவுக்குக் கொண்டு வர முடியும்: அல்லது, அதைத் தொடர்ந்து வளர்க்க முடியும். தொடர்ச்சியுள்ளது தன்னைப் புதுமை செய்துகொள்ள முடியாது; அது என்றும் புதியது ஆகாது: அறியாததை அது புரிந்துகொள்ள முடியாது. தொடர்ச்சி காலநீட்டிப்பு; என்றும் தொடர்வது: காலமற்றதன்று. காலம், காலநீட்டிப்பின் வழியே, காலமற்றது இல்லை. புதியது பிறக்க முடிவு இருக்க வேண்டும். புதியது சிந்தனைத் தொடர்ச்சிக்குள் இல்லை. சிந்தனை காலத்தினாலானது; தொடர்ந்த இயக்கம் இந்த இயக்கம், காலத்தில் இல்லாத ஒரு இருப்பு நிலையைத் தனக்குள் கொள்ள முடியாது. சிந்தனை, கழிந்ததைச் சார்ந்தது. அதன் இருப்பே காலம் சார்ந்தது காலம் வரிசைக்கிரமமானது மட்டுமல்ல; நிகழ்காலத்தின் வழியே எதிர்காலம் நோக்கிச் செல்லும் இறந்த காலத்தின் இயக்கம்தான் சிந்தனை, நினைவு, சொல் ஆகியவற்றின் இயக்கம்: படம் : குறியீடு, பதிவேடு, திரும்ப வருதல் இது. சிந்தனை, நினைவு, வார்த்தை, திரும்பச் சொல்லுதல் மூலம் தொடர்வது. சிந்தனையின் முடிவு, புதியதன் தோற்றமாகிறது. சிந்தனையின் சாவு, நிலையான வாழ்க்கை புதியது பிறக்க, பழையது தொடர்ந்து முடிவுக்கு வரவேண்டும். புதியது எதுவோ, அது தொடர்வதில்லை. புதியது என்றுமே காலத்தின் களத்திற்குள் இல்லை. புதியது நொடிக்கு நொடி சாகிறது. முன்னறியாதது பிறக்க, ஒவ்வொரு நாளும் சாவு நேர வேண்டும். முடிவுதான், தொடக்கம். அச்சம் தான் முடிதலைத் தடுக்கிறது.

ப. 59 C.L. II

**ஞானி:**

1. மலர் புதியது : அது ஒரு வகையில் கிளையோடு, இலைகளோடு, செடியோடு, தொடர்புடையதுதான். இடையறாத் தொடர்ச்சிதான் என்றால் அது இலையாக, கிளையாகவே இருந்திருக்கும். இடையறவோடு கூடிய தொடர்ச்சி, மலர், உலகம் முழுவதும், ஏன் பிரபஞ்சம் முழுவதும் இப்படித்தான் முன்னையதோடு அறவே தொடர்பற்று, முற்றிலும் புதிதாகத் தோன்றியது. எதுவும் இல்லை, தொடர்ச்சி, களம் என்றால், புதியது ஒரு பாய்ச்சல்: சிந்தனைக்கும் இது உண்மைதான்.

2. எல்லா நிகழ்வுகளும் காலத்தில்தான் நிகழ்கின்றன. ஒருவேளை ஒளிக்குக் காலம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் ஒளியின் வேகத்திற்கு குறைந்தது எதுவும் காலத்தோடு, காலத்தில்தான் இயங்குகிறது.

3. காலம் உணர்ச்சியோடு இயங்குவதில்லை. மனிதனுக்கு மட்டுமே கால உணர்வு இருக்கிறது. சில வேளைகளில், காலம் கழிவது உண்மைதான் என்றாலும் கால உணர்வு மனிதனைத் தீண்டுவதில்லை. செறிவான

உணர்வுகளால் நிறைந்திருக்கும் நிலைகள் இத்தகையவை. காதலன், காதலியோடு இருப்பது 'புகழ்பெற்ற' ஓர் உதாரணம், செறிவான தியான நிலையிலும் கால உணர்வு அற்றுப்போய்விடலாம். இன்னும் சில சமயங்களில் முக்கால உணர்வும், பிரிவின்றி, ஒருணர்வாய் நாம் உணர்வதும் உண்டு. அச்சமயங்களில் குறிப்பிட்ட, நிகழ்கால, உணர்வு நமக்கு அற்றுப்போய் விடுகிறது. குறிப்பிட்ட கால உணர்வு அற்ற மனநிலை இது. இவ்வகை அனுபவங்களை, உணர்வுகளைக் காலம்தான் தோற்றுவிக்கிறது என்ற பொருளில் நாம் கூறவில்லை. காலம், உடன் இருக்கிறது; சில சமயம் உணர்கிறோம். சில சமயம் உணர்வது இல்லை.

ஜே.கே. கூறுவது போல, புதிய உணர்வில் நாம் பிரவேசிக்கும்போது, முற்றிலும் புதியதற்குள் இருக்கும்போது, கால உணர்வு அற்றுப்போய் விடுகிறோம். உண்மையில் கால உணர்வு அற்றுப்போகும்போது நாம் புதியதாய்ப் பிறக்கிறோம். பழையதிலிருந்து அறுபட்டுப் புதியதாய்ப் பிறக்கிறோம். ஆனால், பழையதோடு அறவே தொடர்பற்று அல்ல; பழையதிலிருந்து இடையறவு பட்டு, அதன் சாரத்தில், ஓர் உன்னதத்தை அடைகிறோம்.

# 17
# அழகு

**ஜெ.கிருஷ்ணமூர்த்தி:**

எந்த வகையான சிந்தனைத் தொடர்பும் இல்லாமல், அதைப்பற்றி நீங்கள் பெற்றுள்ள அறிவுத் தொடர்பு எதுவும் இல்லாமல், எந்த விதத்தீர்ப்பும் இல்லாமல், உமக்கும் மரத்திற்கும் இடையில் எந்தத் திரையும் இல்லாமல் ஒரு மரம் என்ற புறப்பொருளை நோக்குதலோடு பரிசோதனை செய்ததுண்டா? அந்த மரத்தை உங்களுடைய முழு ஆளுமையோடு, உங்களுடைய முழுச்சக்தியுடன் நீங்கள் கூர்ந்து கவனிக்கும்போது, என்ன உண்மையில் நடைபெறுகிறது என்பதைக் கவனியுங்கள். அதன் செறிவில் மரத்தைக் கவனிப்பவர் யாரும் இல்லாததைக் காண்பீர்கள். கவனம் மட்டுமே இருக்கிறது. கவனமின்மையின் போதுதான், கவனிப்பவரும் கவனிக்கப் படும் பொருளுமாகிய வேறுபாடு தென்படுகிறது.

முழுமையாகத் தன்னை இழந்து, ஒருமரத்தை, விண்மீன்களை, ஆற்றினை, ஒளிபட்டுத் தெறிக்கும் நீரைக் கவனிப்பதில் ஈடுபடும் மனத்திற்குத்தான், அழகு என்ன என்பது தெரியும், உண்மையாக நாம் பார்க்கும்போதுதான்... நாம் அதன்பால் அன்புகொள்ளும் நிலையில் இருக்கிறோம்.

கவனிப்பவர் : கவனிக்கப்படுவது என்ற வேறுபாட்டை முற்றாக இழந்த நிலையில்தான் அழகு எழுகிறது. முழுமையான புனிதத்துவத்தின் போதுதான், முழுமையான தன் இழப்பு நேர்கிறது. ஒரு பூசாரியின் – அவனது அருமை, விதிகள், பணிவு ஆகிய வற்றுடனும், அவனுடைய உடைகள், உணவு, நடத்தை, சிந்தனையோடு கூடிய – புனிதம் அல்ல. கவனிப்பவர்; கவனிக்கப்படுவது ஆகியவற்றில் நிசப்தநிலையில் – கவனிப்பவர் தான் கவனிப்பதைச் சிந்தனையாக மாற்றாத அந்நிலையில் – அந்த நிசப்தத்தில் ஒரு புதிய தன்மையதாகிய அழகு இருக்கிறது. முழுமையாக தனித்திருக்கும் மனநிலை: அமைதிநிலை: அது. அழகு ஆசையும் இன்பமும் இணையாத அன்பு, அந்த அன்பு செறிவானது; அது அழகைப்போல, ஒவ்வொரு நாளும் புதியது. இதற்கு, நேற்றோ நாளையோ இல்லை.

ப. 90-91 F.N.

**ஞானி:**

1. ஒரு மரத்தின் அழகில், விண்மீன்களின் அழகொளியில், நீரோட்டத்தின் அழகில் ஒருவர் தன்னை இழந்து ஈடுபடும்போது, ஓர் உயரிய மனநிலை இயங்குகிறது. உண்மையில், பொருட்களில், நிகழ்ச்சிகளில், மனம் முழுமையாகத் தோய்ந்த நிலையில்தான், அழகு உணர்வு எழுகிறது. மனம் தோய்தலும், அழகு உணர்வில் மனம் நிறைதலும் ஒரு சேர நிகழ்கின்றன. இவற்றில் முன்னது எது, பின்னது எது என்று பிரித்துக் காண்பதற்கு இயலாத முறையில் ஒரு சேர நிகழ்கின்றன. மரத்தின் காட்சியில் அழகு உணர்வை

எழுப்பிக்கொள்ள வேண்டும் என்ற முயற்சியில்லாத நிலையில் இது நேர்கிறது, மரத்தைப் பற்றி முன்னைய நினைவுகளை நினைவு கூர்தலாலும் இந்த அழகியல் உணர்வு எழுவதில்லை. மரம் ஒரு மனிதனைப் போல, வரலாற்று நிகழ்ச்சி போல, ஒரு விந்தை நிகழ்ச்சி போல, நினைவிலிருந்து எதையும் எழுப்பக்கூடியதாகவும் இல்லை. இந்தத் தோய்தலில், மனத்தில் சாந்தநிலை நிலவுகிறது. இதில் ஆரவாரம் இல்லை.

2. கலைஞர்கள், படைப்பாளிகளோடு சம்பந்தப்படுத்திக் கூறப்படும் அழகியல் உணர்வுதான் இது. இந்த மனநிலையை ஜே.கே. கண்டறியும் முறையில் விளக்கும் முறையில் அவர் ஒரு கலைஞராக அழகியல் உணர்வு ஆய்வாளராகத் தென்படுகிறார். ஜே.கே.வின் நூல்களில் இடையிடையே தொடர்ந்து வரும் இயற்கை ரசனைகள் விரிவாக நுகரத்தக்கவை. ஜே.கே. தன் 'தத்துவத்தை' – (அவருடையது தத்துவம் என்று கூறப்படுமானால்) இயற்கையிலிருந்து, இயற்கையை அதில் கலந்து ரசிக்கும் மனவியலிலிருந்து கண்டறிந்ததாகக் கூறுவது கூடியவரை பொருந்தியதாகவே இருக்கக் கூடும். இயற்கைக்குத்தான், மனிதனைப் போன்ற வரலாற்றுச்சிக்கல் இல்லை. இயற்கை அப்பட்டமாக, வெளிப்படையாக இருக்கிறது. இதன் நடுவில், இதன் பார்வையில், இதன் உருக்கத்தில் தன்னை இழந்து விடுவது, எளியது. வரலாறோ கருத்தாக்கங்களோ, சம்பந்தப்படாத இயற்கையில் ஈடுபாடு கொண்ட மனநிலையிலிருந்துதான், ஜே.கே. மனிதனைப் பார்க்கிறார்: பார்த்து அத்தகைய மனநிலையை மனிதவியல் நிலையாக்க முயல்கிறார். இதிலிருந்து ஜே.கே. கூறும் Sensibility யை Aesthetic Sensibility ஆகக் காண்பது, சரியாக இருக்கும். ஜே.கே. அடிக்கடி இயற்கையின் நடுவில் பயணம் செய்வதன் நுட்பத்தை இவ்வாறு விளங்கிக்கொள்வதில் தவறு இல்லை.

# 18

## உறவு - சுரண்டல் - போராட்டம்

**ஜெ.கிருஷ்ணமூர்த்தி:**

வாழ்க்கை என்பது உறவு கொள்ளுதல்; உறவுதான் சமுதாயம். தற்காலச் சமுதாயத்தின் கட்டுக்கோப்பு, ஒருவரை மற்றவர் பயன்படுத்துதல் என்ற அடிப்படையில் அமைந்துள்ளதால், வன்முறை அழிவு துன்பங்களைத் தருகிறது. புரட்சிகரமானது என்று கூறப்படும் அரசு இத்தகைய பயன்படுத்தலை அடிப்படையில் மாற்றவில்லை யானால், இன்னொரு மட்டத்தில், பிரச்சினை, குழப்பம், பகைமையைத்தான் தோற்றுவிக்க முடியும். நாம் ஒருவர் மற்றவரை மனவியல் ரீதியாகத் தேவைப்பட்டுப் பயன்படுத்துவது தொடர்வது வரை உறவு இருக்க முடியாது. உறவுதான், பரிமாறுதல்: சுரண்டல் இருக்குமானால் பரிமாற்றம் எவ்வாறு இருக்க முடியும்? சுரண்டலில் அச்சம் அமைகிறது. அச்சம், தவிர்க்க இயலாதபடி, பலவகையான மாயைகள், வேதனைக்கு வழி வகுக்கிறது. சுரண்டலில்தான் போராட்டம் எழுகிறது. உறவில் அல்ல. போராட்டம், எதிர்ப்பு, பகைமை, ஆகியவை, ஒருவர் மற்றவரை இன்பத்திற்காக தனது சாதனைக்காகப் பயன்படுத்திக் கொள்ளும்போதுதான் நமக்கு இடையில் எழுகின்றன. தானே வெளிப்படுத்திக்கொண்ட லட்சியத்திற்கான நெறியாகப் பயன்படுத்திக் கொள்ளுவதால், போராட்டத்தைத் தீர்க்க முடியாது: எல்லா இலட்சியங்களும், கற்பனை உலகங்களும், தானே வெளிப்படுத்திக் கொண்டவைதான் இதைக் காண்பது இன்றிய மையாதது. அப்போதுதான் போராட்டம் எந்த வகையில் இருந்தாலும், அது உறவை, புரிதலைக் கெடுத்து விடுவதை அறிய முடியும். மனம் அமைதியாக இருக்கும் போதுதான், புரிதல் நிகழும். மனமானது, சிந்தாந்தம், வரட்டுவாதம், நம்பிக்கை ஆகியவற்றால் கட்டுப் படுத்தப்படும்போதும் அமைதி ஏற்படாது. அல்லது தனது சொந்த அனுபவங்கள், நினைவுகளால் கட்டுப்படுத்தப்பட்டபோதும் மனம் தனக்குள் சேர்த்துக்கொண்டிருக்கும்போதும், அமைதியாக இராது. சேர்க்கை எல்லாமே, போராட்டம்தான். உருவாதல் எல்லாமே தனிமைப்படல் வழிதான். ஒழுங்குப்படுத்தல் கட்டுப்படுத்தலில் மனம் அமைதியாக இல்லை. அந்த மனம், செத்த மனம், பலவகைத் தடைகளின் மூலம் அது, தன்னைத் தனிமைப்படுத்திக் கொள்கிறது. ஆகவே அது தவிர்க்க இயலாமல், தனக்கும் மற்றவர்க்கும் வேதனையை உண்டாக்குகிறது.

ப. 31 – 22 CL- II

**ஞானி:**

மனிதர்களுக்கிடையிலான சுரண்டலற்ற, ஒருவரை மற்றவர் பயன்படுத்திக்கொள்ளுதல் அல்லாத உறவுகளில் மனித வாழ்க்கையின் மேன்மையை ஜே.கே. குறிப்பிடுகிறார். சுரண்டல், நிலவும் காலம் முழுவதும் பகைமை, போராட்டங்கள் நிலவும், சுரண்டல், மாயைகளுக்கு, கற்பனைகளுக்கு இடமளிக்கும். எத்தகைய உயர்ந்த லட்சியத்திற்காகவும் யாரையேனும்

பயன்படுத்திக்கொள்வதால் இலட்சியம் மாசடைகிறது. பயன்படுத்துபவன் பயன்படுத்தப்படுபவர் இருவருமே தம் நிலையிலிருந்து தாழ்கிறார்கள். புரட்சிகரமான சித்தாந்தங்களைக் கொண்டிருப்பவர் இதில் கவனமாக இருக்க வேண்டும். மனிதர்களுக்கு இடையில் உறவுகள் சமத்துவம் உடையதாக பரஸ்பரம் நலம் சார்ந்தாக இருக்க வேண்டும்.

ஜே.கே.வின் இக்கருத்துகள் ஏற்கத்தக்கவை. சுரண்டலற்ற, மேன்மையான மனித உணர்வுகளை, இந்த நிகழ்கால உலகிலும், சிற்சில மனிதர்களோடு சில சமயங்களிலேனும் ஏற்படுத்திக் கொள்வதற்கான சாத்தியம் இருக்கிறது. நண்பர்களுக்கிடையில், தோழர்களுக்கிடையில், குடும்பத்திற்குள், சிலசமயம் பொது மக்களோடு, சில சமயங்களில் கண்ணுக்குத் தெரியாத பிற மனிதர்களுடன், இத்தகைய உறவில் ஒருவர் கலத்தல் சாத்தியம். இந்த நிகழ்கால உலகில் இத்தகைய உறவு, காலத்தால், இடத்தால், சந்தர்ப்பத்தால், கட்டுப்பட்டிருக்கிறது. இந்த உன்னதமான உறவின் சில போதுகளுக்கு அப்பால், சுரண்டல் இயல்பானதாக, உலகு தழுவியதாக, கொடியதாக இருக்கிறது. சில சமயங்களில் பெற்ற உன்னதத்தை, பல சமயங்களிலான சுரண்டல் கொடுமை, சிதைத்து விடுகிறது. ஆனால் மனம் என்ன செய்கிறது? சில சமயங்களில் கிட்டிய இந்த உன்னதத்தை, எப்போதும், எல்லாரும் பெறுவதற்கான தேவைகளைச் சிந்திக்கிறது. சுரண்டல் ஒழிய வேண்டும் என்பதன்போதுதான், இலட்சியங்கள், சித்தாந்தங்கள், அனுபவம், நினைவுகள் இப்படியாக நிகழ்வுகள் தொடர்கின்றன. ஜே.கே. இம் முறையில் இதனை அணுகு வதில்லை என்பது தெளிவு. இன்றைய உலகியற் சூழலில் சுரண்டல் கொடுமைகள் அரசியல் நடவடிக்கைகள் மூலமே ஒழிக்கப்படக்கூடியவை. இதற்குச் சித்தாந்தம் முதலியவை தேவை.

இவற்றின் வகுப்பு, செயல்படுத்தலின்போது, மனம் நிம்மதி குலைவது சிலசமயங்களில் உண்மை போலவே, நிம்மதி பெறுவதும் இதன் மூலமே நிகழ்கிறது. ஜே.கே. வுக்கு இந்த அனுபவம் தெரியாது.

இந்த செயல்களுக்கெல்லாம் முற்பட்டதொரு மனநிலையிலேயே ஜே.கே. இருக்க விரும்புகிறார். கன்னிப்பெண்ணாக இருப்பத னாலேயே, கற்பைக்காத்துக் கொள்ள முடியும் என்பதுபோல – சிந்தனை, செயல்கள், இலட்சியங்கள், நடவடிக்கைகளுக்கு முற்பட்ட மனநிலையிலேயே நிம்மதி, மனத்தின் தூய நிலையைக் காத்துக்கொள்ள முடியும் என்று நம்புகிறார். இயற்கைச் சூழலில்தான் தன்னை இழக்காமல் இருக்கமுடியும் என்று நம்புகிறார். மனிதச் சூழலில் பிரச்சினைகள் வருவதை அவர் பார்க்கிறார். இதற்குள் தலையை விட்டுவிடக்கூடாது என்ற கவனத்தோடு தன்னைக் காத்துக் கொள்கிறார். மனத்தைக் கலைத்துவிட்டு, அதன் எளிய, பார்வை, ரசனை வடிவங்களிலேயே இருந்துவிடப் பார்க்கிறார்.

நாம் இப்படிக்கேட்டு வைக்கலாம். நாம் இப்படிக் கேட்பதில் ஜே.கே.வுக்கு மரியாதைக்குறைவாகக் கேட்கவில்லை. இன்றைய உலகியல் நிலைமைகளில் தனது சாந்தமான மனநிலையில் இவரால் நிரந்தரமாக இருக்க முடிகிறதா? அடிக்கடி இதனை இழந்தல்லவா மீட்டுக்கொள்ள வேண்டியிருக்கும்? இயற்கைக்கு மத்தியில் அல்லாமல் போர்க்களத்தில் கடைத்தெருக்களில் ஜே.கே. இந்த மனநிலையை இழக்காமல் இருக்க முடிகிறதா?

# 19

## இருமை – போராட்டம்

**ஜெ.கிருஷ்ணமூர்த்தி:**

வாழ்க்கையை நாம் குடும்பம் என்றும், சமூகம் என்றும், குடும்பம், நாடு என்றும், அலுவலகம் என்றும், அரசியல், சமய வாழ்க்கை என்றும், அமைதி, போர் என்றும், ஒழுங்கு, சீர்குலைவு என்றும் எல்லையில்லாத எதிர்மறைகளாகப் பிரித்துவிட்டோம். இந்த குறுகிய வழியில் நடந்துகொண்டே, அறிவுக்கும் மனத்துக்கும் இடையில் ஓர் இணைவை ஏற்படுத்த – அன்புக்கும் பொறுமைக்கும் இடையில் ஓர் சமநிலையை ஏற்படுத்த முயல்கிறோம். எது இந்தப் பிரிவை ஏற்படுத்துகிறது? தெளிவாகத் தெரிகிறது. பிரிவு வேறுபாடு – கருப்பும், வெண்மையும் – ஆண் பெண் என்று இப்படியாகப் பிரிவுகள் – முரண்பாடுகள், ஆனால் இந்தப் பின்னத்தின், மூலம், சாரம் என்ன? நாம் இதைக் கண்டறியாவிட்டால் பின்னப்படுதல் தவிர்க்க இயலாதது.

இவற்றுக்கிடையில் இருமை இருக்கிறதா? பொருள் வகையாக வெளிச்சம் நிழல் போல, இருமை இருப்பது உண்மைதான். ஆனால் மனவியல் ரீதியாக இருக்கிறதா?.... எது இருக்கிறதோ (what is) அதுதான் இருக்கிறது. எது இருக்க வேண்டுமோ (what should be) அது இல்லை. எது இருக்கிறதோ அந்த மெய்மைத் தவிர்க்க அல்லது வெற்றி கொள்ள சிந்தனை இணைத்துச் சேர்த்த பிரிவு – பிளவுதான், எது இருக்க வேண்டுமோ அது, ஆகவேதான் இருப்பதற்கும், சூக்குமத்திற்கும் இடையில் போராட்டம். சூக்குமம் என்பது கற்பனையானது: கனவியலானது; இலட்சியமானது. இந்த மெய்ம்மை இன்மைதான் பின்னப்படுதலை உண்டாக்கியது. சிந்தனை எப்போதுமே பிளவை ஏற்படுத்துகிறது. காலத்தை இது பிளவு படுத்துகிறது; பார்வையாளர் பார்க்கப்படும் பொருளாகப் பிளவுபடுத்துகிறது. எது இருக்கிறதோ அதுதான் இருக்கிறது: எது இருக்கிறதோ அதைப் பார்ப்பதில், பின்னப்படுதலின் முடிவு இருக்கிறது. நானும், நான் அல்லாததும் முடிவுக்கு வரும் போது, அன்பு எழுகிறது.

ப. 98 S P K R

**ஞானி:**

மனித வாழ்க்கை, குடும்பம், நாடு சமூகம், அலுவலகம், அரசியல், பொருளாதாரம், சமயம் முதலிய அமைப்புகள் மூலம்தான் நடை பெற்றிருக்கிறது. வளர்ந்திருக்கிறது. வாழ்க்கை என்பதை இவற்றிலிருந்து பிரித்துப்பார்க்க முடியாது. இவற்றோடு சார்ந்துதான் வாழ்க்கை வாழ்க்கையாக இருக்கிறது. இவை எதிர்மறை நிலையாக இருக்கின்றன. இப்படி இருப்பதனால்தான், வாழ்க்கை இருக்கிறது. வாழ்க்கையாக இருக்கிறது. வளர்ந்திருக்கிறது. ஒன்றோடு மற்றது அறவே சம்பந்தப்பட்ட எதிர்மறை நிலையாக இவையில்லை. ஒன்றினுள் மற்றதாக, ஒன்றோடொன்று உறவு உடையதாக, ஒன்றினது

இருப்புக்கு, இயக்கத்துக்கு மற்றது இடமாக, காரணமாக இருக்கிறது. அறிவுதான் இந்த எதிர் மறைகளை உண்டாக்கிவிட்டது என்பது உண்மையில்லை. எதிர் மறைகளைக் கண்டறிந்தது அறிவின் செயல். வாழ்க்கை நீரோட்டம்போல இயங்கவேண்டும். சில சமயம், ஏன் பல சமயங்களில் வாழ்க்கை, எதிர் நிலைகளினுள்ளேயே சிக்கித்தேங்கி விடுகிறது. போராட்டம் முதலியவை இப்போது தவிர்க்க இயலாமல் நேர்கின்றன. இவை பின்னங்கள், இவற்றுக்குள்ளேயே முடங்கிவிட்டது வாழ்க்கையல்ல. இந்தப் பின்னங்கள் இல்லாமலும் வாழ்க்கையில்லை. இவற்றின் வழியே, இவற்றை உடைத்துக்கொண்டு, இந்தப் பின்னங்களிலுள்ள எதிர்மறைகளைக் கொண்டே இதனை உடைத்துக்கொண்டு வாழ்க்கை முன்னேறியாக வேண்டும்.

எதிர்மறைகளிலிருந்து விலகிவாழ முடியாது. ஜே.கே.வின் முயற்சி இதுதான். எதிர்மறைகளை அறிவுதான் படைத்தது; ஆகவே அறிவை விட்டு விலகு என்பது இவர் கோரிக்கை, பொருள்வகையில், எதிர்மறைகளை விட்டு விலக முடியாது என்றுதான் ஜே.கே. கருதுகிறார். ஆனால், மனவியல் ரீதியாக விலகமுடியும் என்பது இவர் கருத்து. இதனைச் சாதிக்கத்தான், நிகழ்காலத்தில்தான் எல்லாம் இருக்கின்றனர். அது நீரோட்டம் போன்றது. இதில் நிகழ்காலமே நமக்கு உரியது. அதில் அலைச்சல் இல்லாமல் நின்றுவிட வேண்டும்.

உலகத்தைப் பார்க்கும்போது, புரிந்துகொள்ளும்போது ஒன்றியிருந்து அதன்பாதிப்புக்கு ஆளாகிறோம். பிரிந்து, இருந்து, அதனைப் புரிந்துகொள்கிறோம். உலகத்தை ஒன்றாக, ஓரியக்கமாகப் புரிந்துகொள்வது போலவே பிரித்துப் பார்த்துப் புரிந்துகொள்வதும் தேவையாகிறது. பிரிவு ஒரு குறிப்பிட்ட எல்லைக்குச் சென்று விட்டபிறகு, சேர்த்துப்பார்த்தல், தொகுத்தல், இன்றியமையாமல் தேவையாகிறது. இயக்கம், இப்படித் தொடர்கிறது. பிரித்தலில் பருமையைப் பார்ப்பது போலவே, தொகுத்தலில் நுண்மையைப் பார்க்கிறோம். நுண்மையைக் காண்பதற்குக் கற்பனையும், கனவும் கூடத் தேவை ஆகின்றன. இவ்வகைச் செயல்கள், இச்செயல்களை மறுப்பது வாழ்க்கை மறுப்பாகிவிடும். இச்செயல்களுக்குள், இயக்க மறுப்பு, முடக்குவாதம் தவறானது. ஜே.கே.வின் கருத்தில் இருக்கும் இயக்கச்சார்பான தொகுப்புச்சார்பான கருத்து, ஏற்கத்தக்கது, இதற்கு எதிரான கருத்து மறுக்கத்தக்கது. ஒருவகையில் இது வாழ்க்கை மறுப்பு; இதுவே தத்துவ மறுப்பு: ஜே.கே. வின் Sensibility இத்தகையதுதான்.

# 20

## சுதந்திரம் – தியானம்

**ஜெ. கிருஷ்ணமூர்த்தி:**

சுதந்திரம் சிறைக்குள் இல்லை. அது எவ்வளவு வசதியுடையதாக, அழகு படுத்தப்பட்டதாக இருந்தபோதிலும் சிறைக்குள் சுதந்திரம் இல்லை. சுதந்திரத்தோடு ஒருவர் உரையாடல் நடத்தினால், நினைவு, அறிவு, அனுபவத்தின் எல்லைக்குள் அது இருப்பது சாத்தியமில்லை. சிறையின் எல்லைக்குள் உள்ள கட்டுப்படுத்தப்பட்ட சீர்குலைவை, கட்டுப்பாடான அடிமைத்தனத்தை கடும் உழைப்பை நீங்கள் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டபோதிலும், சுதந்திரம் உங்களைக் கோருவது அதன் சிறைச்சுவர்களை உடைக்க வேண்டும் என்பதுதான். சுதந்திரம் சார்பியலானது அன்று. ஒன்று சுதந்திரம் அல்லது அடிமைத்தனம். சுதந்திரம் இல்லை என்றால், குறுகிய கட்டுப்படுத்தப்பட்ட வாழ்க்கையை – அதன் முரண்பாடுகள், கவலைகள், துன்பங்களுடன் இங்கொன்றும், அங்கொன்றுமாகச் சிறு சிறு மாறுதல்களுடன் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான். – சுதந்திரம், எல்லையற்ற பெருவெளி, வெளிபோதுமானதாக இல்லை என்றால், வன்முறைக்கே இடம் ஏற்படுகிறது. ஒரு வேடனைப்போல – ஒரு பறவை தனது பிரதேசத்திற்காகச் சண்டையிடுவது போல – இந்த வன்முறையும் சார்பிலானது... மனிதர்க்கு இடையிலுள்ள சிறிய இடைவெளிக்காக ஆக்ரமிப்பு நடைபெறுகிறது.

ப. 101-102

சிந்தனை, தனக்கும் சுதந்திரத்திற்கும் இடையில் பாலம் அமைப்பு சாத்தியமில்லை, (102) சிந்தனைக்கு அப்பால் இருப்பது சுதந்திரம், சுதந்திரம் என்பது எல்லையற்ற பெருவெளி: இது பார்வையாளரால் உண்டாக்கப் படுவதில்லை. இந்தச் சுதந்திரத்தைப் பெறுதல், தியானம், காலம் சுதந்திரத்தை என்றும் தர இயலாது.

ப. 103 S P K R

**ஞானி:**

சுதந்திரம் வரலாற்று நிலையோடு, பொருளாதார, சமூக உறவுகளுடன், விஞ்ஞான வளர்ச்சியோடு, மனவியல் மேம்பாட்டுடன் சார்ந்ததுதான். கட்டுப்பட்டதுதான். அதே மசயம், இந்தக் கட்டுப்பாடுகளைத் தொடர்ந்து உடைத்தெறிவதிலும் சுதந்திரம் இருக்கவே செய்கிறது. சிறைச்சாலைகூட ஒரு சமயம் சுதந்திரமாகத் தெரிவதும், இன்னொரு சமயம் அதை உடைப்பது சுதந்திரமாகி விடுவதும், மனித சமுதாயத்தில் உண்மைதான். இத்தகைய சுதந்திரத்தை சமுதாய வளர்ச்சியோடு சேர்த்துதான் மனிதன் பெற முடியும். கட்டுப்பாடு அதனைத் தகர்ப்பதற்கான வன்முறையைத் தூண்டுகிறது. இந்த வன்முறை தேவையானது. மனித சமுதாயத்தின் வளர்ச்சிப்போக்கில், மனிதனின் சுதந்திரம், அதிகரித்துச் செல்லும் என்பது உண்மை. அது போல

எல்லாவற்றிலுமிருந்து விடுபட்ட முற்றான, சுதந்திரம், சாத்தியம் இல்லை. தாகம் ஏற்பட ஏற்படத் தண்ணீர் குடிக்கிறோம். தாகம் ஏற்படவே கூடாது என்று யாரும் தண்ணீராகவே குடித்து வைப்பதில்லை. காலத்தில், வரலாற்றில் சுதந்திரத்தைச் சாதிப்பது செயல்முறை மூலம், இதை ஜே.கே. மறுத்துவிட்டு, மனவெளி மனிதராகி விடுகிறார். தியானத்தின்போது பெறும் தற்காலிக விடுதலையே இவருக்கு உண்மையான, நிலையான விடுதலையாகத் தெரிகிறது. இவர் காணும் சுதந்திரம், கானல்நீர்தான், இது நிலையானதல்ல. ஜே.கே.கூறுவதில் உள்ள உண்மை, உலகின் எந்தச் சூழலினுள்ளும் மனிதன் தியானத்தின்போது, தன்னை விடுதலை நிலையில் கண்டுகொள்ளமுடியும் என்பதுதான் "என் உடலை நீ கட்டிப்போடலாம்; என் உள்ளத்தை நீ என்ன செய்ய முடியும்?"– என்பது இதுதான். எல்லாநிலையிலும் – பிரச்சினைகளுக்கு இடையில் இந்த மனநிலையின் தேவை, சார்பியலானதுதான்.

# 21

# தற்கொலை

**ஜெ.கிருஷ்ணமூர்த்தி:**

பெரும்பாலான மனிதர்கள், தெரிந்தோ தெரியாமலோ எப்போதும் தற்கொலை செய்து கொண்டிருக்கிறார்கள். இதன் தீவிர வடிவம்தான் ஜன்னல் வழியாக வெளியே குதிப்பது. ஆனால், இது முதல்தடை, மனக்கலக்கத்தோடு தொடங்குகிறது. நம்மைச்சூழ நாம் சுவரை எழுப்பிக்கொண்டு, அதற்குப்பின்னர் நமது தனித்த வாழ்க்கையை வாழ்கிறோம் – கணவன், மனைவி, குழந்தைகள் இருந்தபோதிலும் – இந்தத் தனி வாழ்க்கை, தற்கொலை வாழ்க்கை. இதுதான் சமயத்தாலும், சமுதாயத்தாலும் அங்கீகரிக்கப்பட்ட அறவியல். இந்தத் தனிமைப்படுதல் தொடர்ச்சியான ஒரு சங்கிலி போன்றது. இது போருக்கும், தன் அழிவுக்கும் கொண்டு செல்லுகிறது (பிரிதல்). ஒரு தனி மனிதன், சமுதாயம், நாடு என்ற அளவில் தனிப்படல் தற்கொலைதான். ஒவ்வொருவரும் தற்சார்ந்த, தன்னை மையமாக்கிய செயலை, வாழ்க்கையை வாழ விரும்புகிறார்கள். நம்பிக்கையும், பிடிவாதமும் உன்னைக் கட்டுப்படுத்துவது, தற்கொலை.

ப. 107 S P K R

**ஞானி:**

தன்னலம் கருதுவது தற்கொலை; ஒரு நாடும், ஒரு சமுதாயமும் இப்படிச் செய்து கொள்வது, தற்கொலை. தன்னலம் உடையவன், எத்தகைய முறையில் எத்தனை பேரால் சூழப்பட்டிருந்தாலும் அவன் தனிமைப்பட்டே நிற்கிறான். சமுதாயம் முழுவதும் இப்படித்தான். சமயம் அங்கீகரிக்கும் வாழ்க்கை, இந்த தற்கொலை வாழ்க்கையைத்தான். தன்னை மையமாக்கிக் கொள்வதன் போக்கில்தான், நம்பிக்கையும் பிடிவாதமும் எழுகின்றன. இது சமுதாய ஓட்டத்தில் மனிதனை இயங்கச்செய்யாது. உயிருள்ளது போலத் தோன்றினாலும், இது உயிரற்ற வாழ்க்கை. இது ஆக்கத்துக்கான வாழ்க்கையல்ல: அழிவுக்கான வாழ்க்கை. இப்படித்தான் பெரும்பாலான மனிதர்கள் வாழ்ந்திருக்கிறார்கள். இது வரலாறு. இதுதான் சமுதாயமாகவும் இருக்கிறது.

இப்படிக் கூறுவதன் மூலம், வரலாற்றையும், சமுதாயத்தையும் ஒரு கோட்பாட்டின் மூலம் ஜே.கே. புரிந்துகொண்டிருக்கிறார். சமுதாயத்தில் வன்முறை அடிப்படையாக இருக்கிறது என்பது இத்தகையதொரு கோட்பாடுதான். சித்தாந்தம்தான். இத்தகையதாக எப்படித் திரிபுற்றது. அல்லது எப்படி இயங்குகிறது. ஏன்? என்ற கேள்வி ஜே.கே.வுக்கு உரியது அல்ல. இத்தகைய வரலாற்றிலிருந்தும், சமுதாயத்திலிருந்தும் ஒரு மனிதன் தன்னை விலக்கிக் கொண்டுவிட முடியும் என்பதற்கு ஜே.கே. ஒரு சான்று. விலக்கிக் கொள்ளுதலும், தனிமைப்படல்தான்; இதிலும்கூட இருப்பது தன்னலம்தான். இதனுள்ளும் ஒரு பொதுநலம் இயங்குகிறது. வாழ்க்கைப்பற்றிய உண்மையை இது உள்ளடக்கியிருக்கிறது. முற்றிலும் தன்னலச்சார்பில் மனிதர்கள் இருக்க முடியாது; வாழ முடியாது. தன்னலத்தை இழப்பதில் அளவு வேறுபடலாம். ஆனால் தன்னல இழப்பின்போதுதான் ஒரு மனிதன் விடுதலை பெறுகிறான். வாழ்க்கை நீரோட்டத்தில் கலந்துகொள்வது, இதில் உச்ச அளவு.

